

கோவை மாவட்டம், ஈரோடுவட்டம், வெங்கம்பூர் அருள்மிகு வரதராசப் பெருமாள் திருக்கோயில் சார்பில், பொதுமக்களுக்குப் பயன்படும் பொருட்டு, ரூபா 5 இலட்சத்து 60 ஆயிரம் செலவில் கட்டப்பெற்றுள்ள திருமண மண்டபத்தினை, தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் குத்துவிளக்கேற்றித் திறந்து வைத்தல். கைத்தறி அமைச்சர் மாண்புமிகு திருமதி. சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்களும், கோவைத் துணை ஆணையர் திரு. ஜி. ஆதிமூலம் அவர்களும், ஈரோடு உதவி ஆணையாளர் திரு. இராசாராம் அவர்களும் உடன் உள்ளனர். (21.10.78).



முகப்பு :
மூன்றாம் குலோத்துங்கச் சோழன் (கி. பி. 1178-1216) கட்டியதும், கும்பகோணத்துக்கு அருகில் உள்ளதும் ஆகிய திரிபுவனம் நடுக்கம் தீர்த்த நாதர் (கம்பஹரேசுவரர்) திருக்கோயில்

# திருக்கோயில்


| மாலை : 21 | காளயுக்தி ஆண்டு-மார்கழித் திங்கள் — டிசம்பர்-1978 | மணி : 3 |
|---|---|---|


## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. **15—00** உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. **1—25** வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் *[PINCODE]* எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. **9—60** ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. **20—00**-ல் இருந்து ரூ. **25—00** ஆக ஜனவரி **1978** முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப்போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்




**ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.**

**இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு**


**"என் கடன் பணி செய்து கிடப்பதே"**

# திருமண மண்டபத் திறப்புவிழாச் சிறப்புரை

மாண்புமிகு தமிழக முதல்வர்
திரு. எம். ஜி. இராமச்சந்திரன்
அவர்கள்

[கோவை மாவட்டம், வெங்கம்பூர், அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக் கோயிலின் சார்பில், சுமார் ரூ. 5.60 இலட்சம் செலவில் கட்டப்பட்ட கல்யாண மண்டபத்தினைத் திறந்து வைத்துப் பேசிய தமிழ்நாடு முதல்வர் மாண்புமிகு திரு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களின் சொற்பொழிவின் சுருக்கம்.]

விழாத் தலைவர் கைத்தறித் துறை அமைச்சர் அவர்களே! அருமை நண்பர் ப. உ. சண்முகம் அவர்களே! நல்வாழ்வுத்துறை அமைச்சர் அவர்களே! இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை ஆணையர் அவர்களே! மற்றும் விழாவிற்கு வருகை தந்துள்ள பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களே! என் இரத்தத்தின் இரத்த மான உடன் பிறப்புக்களே!

எனக்கு முன் பேசிய நல்வாழ்வுத்துறை அமைச்சர் அவர்கள் சிரிப்பதற்கும், வீட்டிற்குச் சென்று சிந்திப்பதற்கும், உகந்த முறையில் பேசினுர்கள்.

எவரொருவர் தனக்குக் கொடுக்கப்பட்ட, தன்னல் ஏற்றுக் கொள்ளப்பட்ட கடமையினைச் செவ்வனே செய்கின்ருர்களோ, அவர்கள்தான், நடைமுறையில் ஆண்டவனின் அருளுக்குப் பாத்திரர்கள் ஆகின்ருர்கள்.

நான் முதலமைச்சர் பொறுப்பேற்ற பின்பு, அறநிலையத்துறையை என் பொறுப்பில் வைத்திருந்தேன். அப்போது பல கோப்புக்களை ஊன்றிக் கவனித்ததில், மேலெழுந்த வாரியாக, இத்துறையைச் சீர்படுத்த முடியாது என்பதை உணர்ந்து கொண்டேன். இத்துறையில் பொருளாதாரப் பிரச்சினை மட்டுமின்றி, உள்ளமும் உணர்ச்சிகளும் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளும் இருக்கின்றன. எனவே, செய்யப்பட வேண்டிய சீர்திருத்த நடவடிக்கைகள், மிகவும் கவனமாகவும் படிப்படியாகவும் மேற்கொள்ளப்படவேண்டும்.

நான் கதர் உடுத்திய காலம், நான் காங்கிரசில் இருந்த காலம்! அக்காலத்தில் என்னுடைய இளம் பருவத்தில் நடந்த ஒரு சம்பவத்தை இங்கே குறிப்பிட விரும்புகின்றேன். அப்போது எனக்கு வயது 8. திருப்பதிக்குப் போக வேண்டும் என்று நினைத்தேன். நான் சேர்ந்திருந்த நாடகக் கம்பெனியின் சார்பில், அங்குப் போகும் சந்தர்ப்பம் கிடைத்தது.

பிறகு என்னுடைய 22-வது வயதில், திருப்பதிக்குப் போகவேண்டும் என்று நினைத்து நண்பர் ஒருவருடன் சென்றேன். அங்குக் கடுமையான கூட்டம், சுவாமி கும்பிட முடியாத நிலை! அப்பொழுது நான் பிரபலமாகிக் கொண்டிருந்தேன். என்னைத் தெரிந்து கொண்டு சுற்றிலும் கூட்டம் கூட ஆரம்பித்தது. இந்த நிலையில் நண்பர் என்னைத் தனியாக அழைத்து, சீக்கிரமே சுவாமி கும்பிட்டு விட்டுத் திரும்ப ஏற்பாடு செய்கிறேன் என்று கூறி, உண்டியல் வைத்திருக்கும் வழியாக அழைத்துச் சென்ருர். எவ்வாறு இது சாத்தியப்பட்டது? என்று கேட்டேன். கோவிலில் உள்ளவர்களுக்குத் தலா இரண்டு ரூபாய் கொடுத்து உடனடியாகச் சுவாமி கும்பிட்டுவிட்டுத் திரும்ப ஏற்பாடு செய்ததாகக் கூறினுர். என் மனம் மிகவும் வேதனைப் பட்டது. பணம் கொடுத்துத்தான் சுவாமி தரிசனம் செய்ய வேண்டும் என்பதில்லை. நான் தர்ம தரிசனம்தான் பார்ப்பேன். காசு கொடுத்துச் சுவாமி கும்பிடமாட்டேன் என்று திரும்பிவிட்டேன்.

சிலருக்குச் சில வேளைகளில் கோயிலுக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். பலருக்குப் பல வேளைகளில் கோயிலுக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும்.

சட்டத்திருத்தம் போதாது. இதயத் தூய்மையும், உடல் சுத்தமும் தேவை. ஏன் இதனைக் குறிப்பிடுகிறேன் என்ருல், கோயில்களில் பக்திக்கு அளிக்கும் மதிப்பினைவிட, பணத்திற்கு அளிக்கும் மதிப்புப் பெருகிவிட்டது.

பக்தர்கள் கோயிலுக்கு வருவது பணத்தைச் செலுத்தவா? சில மாதங்களுக்கு முன்பு ஒரு கோவிலுக்குச் சென்றேன். போர்டு மாட்டப்பட்டிருந்தது. சாமி தரிசனத்திற்குச் செல்லும் வழியைக் காட்டக் குறித்திருப்பார்கள் என்று நினைத்தேன். ஆனல் உண்டியலில் காணிக்கை செலுத்தப்போகும் வழி என்று போட்டிருந்தார்கள். அங்கே கோயில் கொண்டுள்ள அம்மனின் சந்நிதிக்குப் போகும் வழி என்று, எங்கும் போர்டு போடப்படவில்லை.

என்னைப் பொறுத்த வரையில், நான் ஒரு முடிவுக்கு வந்தேன். என்னைப் பெற்றெடுத்த தாயைத் தெய்வமாகக் கண்டேன். என்வீட்டில் உள்ள அறையில் என் தாய், தந்தை, மனைவியின் தாய், தந்தை, இந்த நாட்டிற்குச் சுதந்திரம் வாங்கித் தந்த அண்ணல் காந்தி ஆகியோரின் படங்களை வைத்துத் தெய்வமாக வணங்கி வருகின்றேன். அதில் ஒரு புதிய படமும் வைக்கப்பட்டுள்ளது. அதுதான் பேரறிஞர் அண்ணு அவர்களின் படம்!

அறநிலையத்துறை என்பது தர்மத்தின் சின்னம். அங்கு தர்மகர்த்தர்களாக இருப்பவர்கள், நீதிக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும். அண்ணல் காந்தியடிகள் ஒவ்வொரு பணக்கார

னிடத்தில் இருக்கும் சொத்துக்கள் அனைத்தும், ஏழை எளியவர்களுக்காக, தாழ்த்தப்பட்ட மக்களின் நன்மைகளுக்காகச் செலவுகளிலும், திட்டங்களிலும் ஈடுபடுத்தப்பட வேண்டும் என்ற எண்ணத்தில், ஒவ்வொரு பணக்காரனும் தர்மகர்த்தர் எனக் கூறினர். இதையே தான், பேரறிஞர் அண்ணா அவர்களும், ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்கிறோம் என்று கூறினர்.

சாதி இருக்க வேண்டுமா? தேவையில்லையா? என்றும்; பக்தி உள்ளவர்கள் என்றும் இல்லாதவர்கள் என்றும்; பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. இது போன்ற முரண்பட்ட கருத்துக்களுக்கு அப்பால் நின்று, உழைக்கும் வர்க்கத்திற்கு மதிப்பளித்து நாம் பணியாற்றினல், நாட்டு மக்கள் நல்வாழ்வு பெறுவார்கள். பிரச்சினைகளைக் கிளப்பிக் கொண்டிருப்பதில் யாருக்கும் பலன் இல்லை. நாட்டில் அடி மட்டத்தில் இருக்கும் மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு, பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதே சாலச் சிறந்ததாகும்.

சோஷலிசம், கம்யூனிசம் என்று கூறிக் கொண்டு, ஆலயநிலங்களை உரிமைப்படுத்திக் கொள்வோம், குத்தகை தரமாட்டோம் என்று போராட்டம் நடத்தப்போவதாகச் சில கட்சிக்காரர்கள் முன் வருகின்றார்கள். இது அவசியம்தானு?

தமிழ்நாட்டில் இந்து சமய அறநிலையத்துறையின்கீழ்ச் சுமார் 25 ஆயிரம் கோயில்கள் இருக்கின்றன. இத்துறையின் நிர்வாகத்தின்கீழ் வராமல் இருப்பவை இன்னும் ஏராளம். இந்தக் கோயில்களை நம்பி எத்தனைக் குடும்பங்கள் இருக்கின்றன? என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். கோயில் நிலங்களைக் கூறு போட்டுக் கொள்ள நூற்றுக்கு பத்துபேர் என்றால், அதனல் வேலையிழந்து பட்டினி கிடக்கப் போகின்றவர்கள், பாதிக்கப்படுபவர்கள், 90 பேராகும்.

பல கோயில்களில் பணியாற்றுபவர்களுக்கு மாதம் ஒன்றுக்கு 10 ரூபாய், 8 ரூபாய் என்று சம்பளம் கொடுக்கப்பட்டு வருகின்றது. அரசியல் லாபம் பெற ஆலய நிலங்களைப் பட்டா போட்டுக் கொடுத்து, அரைப்பட்டினியில் இருக்கும் ஆலய ஊழியர்களை முழுப் பட்டினி போட வேண்டுமா? வருமானம் குறைந்து தொழிற்சாலைகள் மூடப்படுவது போல, ஆலயக் கதவுகளும் மூடப்படுகின்றன. இந்த நிலை தொடர வேண்டுமா?

ஆலய நிலங்களுக்குக் குத்தகை தராமல், திருக்கோயில்களின் பூசை முறைகள் பாதிக்கப்படும் வகையில், ஆலய நிலங்களைத் தன் உறவினர்களின் பேரில் வைத்துக் கொண்டு இருப்பதைப் பொது உடைமை என்றோ, சோஷலிசம் என்றோ கூறினல், நான் அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. கோயில் நிலங்கள் நல்ல காரியங்களுக்குப் பயன்படவேண்டும். ஏராளமான கோயில் நிலங்களைத் தங்கள் சொந்த உபயோகத்திற்கு வைத்துக் கொண்டு இருக்கும் சுயநலவாதிகளின்மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டால், அந்த நடவடிக்கைகள் எவ்வாறு பொது உடைமைக்கும், சோஷலிசத்திற்கும் எதிரானதாகும்?

நிலத்தை உழுபவர்கள் மட்டும்தான் தொழிலாளர்களா? ஆலயத்தில் நாதசுரம் வாசிப்பவர்கள், நகரா வாசிப்பவர்கள், மற்றும் தங்கள் வாழ்விற்காகக் கோயிலையே நம்பி இருக்கும் பணியாளர்கள் பலரும், தொழிலாளர்கள் இல்லையா? உண்மையில், கோயில் நிலங்களை உழுபவர்களை விட, கோயில் நிலங்களில் இருந்து கிடைக்கும் வருவாயில், பலபேர் வாழ்ந்து வருகின்றார்கள். குத்தகைதாரர்களுக்குக் கோயில் நிலங்களைத் தந்துவிட்டால், பல்லாயிரக்கணக்கிலுள்ள கோயிற் பணியாளர்களின் வாழ்க்கை என்னவது?

தமிழ்நாட்டில் உள்ள திருக்கோயில்கள், நம்முடைய கலைகள், கலாசாரத்தின் சின்னங்களாக இருந்து வருகின்றன. மொழியையும், பண்பாட்டையும், கற்றுக் கொள்ளும் கல்லூரிகளாகவும் அவைகள் விளங்குகின்றன. கல்லிலே நாதத்தை உண்டாக்கினர்கள். நடன முத்திரைகளைத் தத்ரூபமாக விளக்கும் சிற்பங்கள் ஏராளம். அந்தச் சிற்பங்களில் அன்றைத் தமிழ் நாட்டின் உடை வகைகள், ஆபரணங்கள் ஆகியவை காணக் கிடக்கின்றன. அவைகள் அந்தந்த நூற்றாண்டுகளின் பிரதிபலிப்பு. இது போன்ற கோயில் சிற்பங்கள் காப்பாற்றப்படாக வேண்டும். தேவாரம், திருவாசகம் போன்ற நூல்கள், பக்திச் சுவையுடன், நயம் மிகுந்த எதுகைமோனைகளுடன், இலக்கியச் சிறப்புக்களுடன் இருக்கின்றன. ஆயிரக் கணக்கான கைவினைஞர்கள், தங்களின் அன்றாட வாழ்க்கைக்குக் கோயிலின் வருமானத்தைத் தான் நம்பி இருக்கின்றார்கள். முன்பு அவர்கள் பணிக்காகக் கொடுக்கப்பட்ட சாதம், அவர்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் போதுமானதாக இருந்தது. ஆனல் இப்பொழுது ஒருவர்கூட வயிறார உண்ணும் நிலையில் இல்லை. அவர்களது உணவைப் பறித்துச் சில குத்தகை தாரர்களுக்கு மட்டும் நன்மை செய்வது, எப்படிப் பார்த்தாலும் நியாயமானதாகாது.

வாழ முடியாத நிலையில், பல்லாயிரக் கணக்கிலுள்ள கோயிற் பணியாளர்களாகிய, வாழ்க்கைக்குச் சொந்தக்காரர்களை, வாழ வைத்தே ஆகவேண்டும்.

அருள்மிகு வரதராசப் பெருமாள் திருக்கோயிலுக்குச் சொந்தமான 150 ஏக்கர் நிலங்கள், தனியார்கள் பலரின் கையில் இருந்தன. அதனல் இத் திருக்கோயிலின் பூசைகள் நடைபெற முடியாத நிலையில் இருந்தன. அந் நிலங்களைப் பல ஆண்டுகள் வழக்கு மன்றங்களில் போராடி, இத்திருக்கோயில் வசம் மீட்டுக் கொடுத்து உதவிய திரு. பெரியசாமி அவர்களை, நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

இந்தக் கோயில் நிதியில் இருந்து பள்ளிக் கூடம், மருத்துவமனை போன்றவைகள் கட்டுவதற்குத் திட்டம் இருப்பதாகத் தெரிவித்தார்கள். இதுபோன்ற நல்ல பயனுள்ள பணிகள் வளரட்டும், வரவேற்கிறேன். அதே நேரத்தில் கோயில்களுக்கு வருமானம் தரக் கூடிய நிலங்களும் பாதுகாக்கப்படவேண்டும் என்று சொல்லி, இந்த வாய்ப்பளித்ததற்கு நன்றி கூறி அமைகிறேன். வணக்கம், வாழ்க அண்ணாநாமம்!

**

# தலங்களின் சிறப்பு

''அருளாளர்கள் வாழ்வதனால், தலங்கள் புனிதமும் சிறப்பும் பெற்று விளங்குகின்றன. அருளாளர்கள் ஆகிய சான்றோர்களின் திருமேனியிலிருந்து ஒளி வீசி வெளிப்படுகின்ற தூய்மையான காந்த ஈர்ப்பு ஆற்றல், பரவிப் பாய்ந்து ஊடுருவி நிறைந்து நின்று, அவர்கள் வாழும் இடங்களின் சூழ்நிலை முழுவதையும், அமைதியளிக்கும் அருளசைவுகளால் இயக்குவிக்கின்றது. தேவ தூதன் ஒருவன் ஒரு குறிப்பிட்ட பருவ காலத்தில் வெளிப்பட்டுத் தோன்றி, ஒரு பொய்கையின் நீரைத் தொட்டு, அங்ஙனம் தொட்டதனால், அதன் நீருக்கு நோய் தீர்க்கும் அருளாற்றற்பண்பு நலங்களை வழங்கினான்என்று, விவிலிய நூலில், 4ஆம் நற்சிறப்புச் செய்தியில் (தூய யோவான் 5, 4) சொல்லப்படுவது போல, சில சமயங்களில் அருளாளர்கள் அல்லது மேலுலகிலிருந்து போதரும் தேவர்கள், தாமே நேரடியாக வந்து, ஒரு குறிப்பிட்ட இடத்தைப் புனிதமான தெய்விக ஆற்றல் உடையதாகச் செய்தருள்வார்கள்!''

''அத்தகைய இடங்களில், ஆர்வமற்று விருப்பம் இல்லாத சாதாரண மனிதர்களும் கூட, சிற்சில சமயங்களில் அந்தத் தூய இனிய தெய்விக ஆற்றலை உணரப் பெறுவர்; தற்காலிகமாகவேனும் உள்ள நெகிழ்ச்சியும் மென்மைத் தன்மையும் உற்று நிற்பர் ; உயரிய மனநிலையும் நோக்கங்களும் கொள்வர். அவர்களின் மனம் ஓய்வும் அமைதியும் பெறும்; உள்ளம் கவலைகளிலிருந்து விடுபட்டு இனிய இன்ப உணர்வில் திளைக்கும்.''

''நன்றாகக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணர்பவர்கள் எவரும், ஏனைய பிற இடங்களையெல்லாம் விட, ஒரு சில இடங்கள், அமைதியுணர்வு பெறுவதற்கும், தியான நிலை கைகூடுவதற்கும், சமயச் சிந்தனைகளில் ஈடுபடுவதற்கும், இறைவழிபாடு இயற்றுவதற்கும் ஏற்றனவாக இருத்தலை இனிது உணரலாம். உலகச் சிந்தனைகளை பெரிதும் உலவப் பெற்றதும், பயனற்ற வீண் வெற்றுரையாடல்களை நிகழ்ந்ததும், சாதாரண உலகியல் வாழ்க்கைச் செயல்களை நடைபெற்றதும் ஆகிய ஓர் அறையில், அல்லது ஒரு கட்டிடத்தில், நாம் நம் மனத்தை அமைதிப்படுத்துதலும், நம் நினைவுகளை ஒருமுகப்படுத்துதலும், ஒரு சிறிதும் இயலாமல், மிகவும் கடினமாக இருக்கும்.''

''ஆனால், தொடர்ந்து ஒவ்வொரு ஆண்டிலும், ஒவ்வொரு நூற்றாண்டிலும், சமயச் சிந்தனைகளும் செயல்களும் நடைபெற்று வந்த, தூய நல்ல புனிதமான இடங்களில், நம் மனித உள்ளங்கள் செம்மை நிலையுற்று, அமைதியுணர்வும் சாந்த நிலையும் தழைக்கப் பெறுகின்றன. முன்னைய இடத்தில் கடினமான பெருமுயற்சிகள் செய்து, நாம் அடைய வேண்டியிருந்த சாந்தமும் அமைதியும், பின்னைய இடங்களில் எளிதாகவும் இயல்பாகவும், தாமே வந்து சார்ந்து நம்மை மகிழ்விக்கும்.''

''இதுவே, யாத்திரைத் தலங்கள், மற்றும் தற்காலிக ஓய்வுத் தனிமைப் புனித இடங்கள், ஆகியவற்றின் தனிப் பெரும் சிறப்பிற்கு அடிப்படைக் காரணம் ஆகும்! தலங்களால் மனிதன் தனது புறமுக நாட்டத்தைக் கைவிட்டுத் தனக்குள்ளே எழுந்தருளியிருக்கும் இறைவனைத் தேடி உணர்வதற்கு, அகமுக நோக்கில் திரும்புகின்றான்; அந்தத் தலங்களில் தனக்கு முன்னே பல்லாயிரக் கணக்கான மக்களால், பன்னெடுங்காலமாகத் தொடர்ந்து அனுபவிக்கவும், பரப்பவும் பெற்ற, தூய சிறந்த சூழ்நிலையின் அருளாற்றல் அசைவு அலைகளில் படிந்து தோய்ந்து, அவற்றின் உதவியினால் புனிதமும் தெய்விகமும் எய்திப் பொலிவுறுகின்றான். இங்ஙனம் செய்வித்து மனிதனை உயர்த்திப் புனிதம்ஆக்குவதே தலங்களின் சிறப்பியற் பண்பாகும்.'' என்று **(Dr. Annie Besant) அன்னை வசந்தை** அம்மையார் அவர்கள், ''மறைபொருளியற்கிறித்துவ சமயம்'' **(Esoteric Christianity)** என்னும் தம் நூலில் அழகுற விளக்குகின்றார்.

இதனால் தலயாத்திரையின் பயனை நம்மனோர் யாவரும் செம்மையுற உணரலாம். ''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு, ஓர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே'' என்று தாயுமான சுவாமிகள் குறிப்பிட்டு அருளியிருத்தலும், நாம் சிந்தித்து உணர்தற்குரியது.

*—தமிழாக்கம்: ந. ரா. முருகவேள்.*

---

" Places are made sacred, by the living in them of saints, whose pure magnetism, radiating from them, attunes the whole atmosphere to peace-giving vibrations. Sometimes holy men, or beings from the higher worlds, will directly magnetise a certain place, as in the case mentioned in the Fourth Gospel (St. John, V, 4), where an angel came at a certain season and touched the water, giving it healing qualities. In such places even careless worldly men will sometimes feel the blessed influence, and will be temporarily softened and inclined towards higher things. . . .

Anyone who observes himself will find that some places are more conducive to calm meditation, to religious thought, to worship, than others. In a room, a building, where there has been a great deal of worldly thought, of frivolous conversation, of mere rush of ordinary worldly life, it is far harder to quiet the mind and to concentrate the thought, than in a place where religious thought has been carried on year after year, century after century ; there the mind becomes calm and tranquil, and that which would have demanded serious effort in the first place is done without effort in the second.

This is the rationale of places of pilgrimage, of temporary retreats into seclusion ; the man turns inward to seek the God within him, and is aided by the atmosphere created by thousands of others who before him have sought the same in the same place."

—DR. ANNIE BESANT,
ESOTERIC CHRISTIANITY, PAGE. 260

# நின்ற செல்வர்

"செந்தமிழ்ச் செல்வர்"
திரு கி.வா. ஜகந்நாதன், M.A. அவர்கள்

சிவபெருமான் எங்கே இருப்பான் என்று கேட்பதைவிட, அவன் எங்கே இல்லை என்று கேட்பது எளிது. அவன் இல்லாத இடமே இல்லை. பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற 'பரம்பொருள்' அவன். நுண்ணிய தினும் நுண்ணிய பொருளாக இருப்பான்; திண்ணியதினும் திண்ணிதாக இருப்பான்.

கண்ணில் காணும்படி அவன் கொள்ளும் கோலங்கள் பல. நுண்ணிய பொருளாக இருந்தால், அவனைக் காணவும் முடியாது; அவனைப் பற்றிச் சிந்திக்கவும் முடியாது. அவன் பலவகைத் திருக்கோலங்கொண்டு அவனது அருளே கண்ணாகக் கொண்டு காண்பவர்களுக்குக் காட்சியளிக்கிறான். தாம் கண்ட காட்சியை அவர்கள் மற்றவர்களுக்குச் சொல்கிறார்கள். அந்தக் காட்சியோடு அவன் செய்யும் திரு விளையாடல்களையும் அவர்கள் அறிந்து வெளிப் படுத்துகிறார்கள். அவற்றைக் கேட்டு மகிழ் கிறோம்.

அவனை நாமும் காணவேண்டும் என்ற ஆர்வம் எழுகிறது. ஆனால் நமக்குப் பக்குவம் போதவில்லை. அதற்காக ஆண்டவனே அருளிய ஆகம நூலின்படி பெருமக்கள் இறைவனுடைய கோலங்களை நாம் புறக்கண்ணாலே காணும்படி விக்கிரகங்களாக வடித்துத் தந்திருக்கிறார்கள். அவற்றைத் திருக்கோயில்களில் நிறுவி வழி பட்டு வருகிறோம். உலகியலில் ஈடுபட்டு மயங்கும் மக்களுடைய பொறிகளையெல்லாம் மடைமாற்றி இறைவனுடைய தொடர்புடைய பொருள்களில் ஈடுபடச் செய்வதற்குத் திருக் கோயில்களும், அங்கே எழுந்தருளியுள்ள மூர்த்திகளும் உதவுகின்றன.

இறைவனுடைய வடிவத்தைக் கண்டு கண் களிக்கிறது ; அவனுடைய திருநாமத்தையும் புகழையும் கேட்டுக் காது மகிழ்கிறது; அவனுக்கு அருச்சித்த பூவின் மணத்தை நுகர்ந்து நாசி இன்புறுகிறது ; அவனுக்கு நிவேதனமான பிரசாதத்தை உண்டு நாக்குச் சுவைக்கிறது; அவன் திருக்கோயில் தீர்த்தத்தில் ஆடியும், நந்தவனம் சூழ்ந்த பிராகாரக் காற்றை அநுபவித்தும் உடம்பு உவகை அடை கிறது. இப்படி ஐம்பொறிகளுக்கும் அங்கே நல்ல நுகர்ச்சி கிடைக்கிறது.

கற்கோயில்களுக்குச் சென்று வழிபடுவ தனால், கடவுளுணர்ச்சி உள்ளத்தில் முளை விடுகிறது. ஆண்டவனுடைய அருளாளர்கள் அருளியுள்ள சொற்கோயில்களாகிய நூல் களைப் படித்தும் படிந்தும் பழகினால், அந்த உணர்ச்சி மேலும் மேலும் பெருக வழி உண்டாகிறது. முளை செடியாகிறது, பிறகு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற படிகளில் ஏறினால் செடி அரும்பி மலர்ந்து காய்த்துக் கனியைத் தருகிறது.

''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே''

என்று தாயுமானவர் பாடுகிறார்.

கற்கோயிலில் காணும் மூர்த்தியைவிடச் சொற்கோயிலில் காணும் இறைவனின் கோலங் கள் பலபலவாக இருக்கும். அங்கே அவன் கருணையை விளக்கும் காட்சிகளும் பராக் கிரமத்தைச் சொல்லும் பகுதிகளும் நிரம்ப வரும். தேவாரப் பாசுரங்களைப் பார்த்தால் இப்படி உள்ள காட்சிகளைக் காணலாம்.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவேட் களம் என்ற தலத்திற்குச் சென்றார். சிதம் பரத்திற்கு அருகில் கடற்கரையில் உள்ள தலம் அது. இப்போது அண்ணாமலை நகராக விளங் கும் இடம் அதுதான். அந்தத் தலத்துக்குச் சென்ற போது சம்பந்தர் ஒரு திருப்பதிகம் பாடினார். அங்குள்ள மூர்த்தியை அவர் வருணிக்கவில்லை. சிவபெருமானுடைய பல வகைத் திருக்கோலங்களைச் சொல்லி, 'இப்படி யெல்லாம் இருப்பவர் வேட்களத்திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கிறார்' என்று பாடுகிறார். அந்தக் கோலங்களைத் தம் உள்ளக்கண்ணால் கண்டு மகிழ்ந்த அருளாளர் அவர்.

ஒரு பாட்டில் பல இரட்டைகளை அடுக்கிச் சொல்கிறார். இறைவன் எழுந்தருளுகிறான். அவனைச் சூழ்ந்து பூதகணங்கள் வருகின்றன. பேரெழில் படைத்த பலரை உடன் வரும்படி ஏவி அவர்களிடையே ஒய்யாரமாகச் செல்வது உலகில் உள்ள மன்னர்களுக்கும் செல்வர் களுக்கும் இயல்பு. ஆனால் சிவபெருமானோ பல்வேறு கோணல் மாணலான வடிவங்களை யுடைய பூதகணங்கள் சூழ வருகிறான். அந்தப் பூதங்களின் வடிவத்தைக் கண்டு நாம் ஏமாறக்கூடாது. அவற்றின் உள்ளம் தூய் மையானது. இறைவனுக்குத் திருத்தொண்டு செய்வதை அன்றி வேறு ஒன்றும் அறியாதவை அவை ; எப்போதும் இறைவனோடு இருப்பவை.

பூதகணம் ஒரு பக்கம் ; மற்றக் கணங்கள் மற்றொரு பக்கம் சூழ வருகிறான். தேவகணம், முனிவர்கணம், பக்தர்கணம் ஆகிய கூட்டம் ஒரு பக்கம். இப்படி இருவேறு பகுதிகளாக அந்தக் கணங்கள் வருகின்றன. பூதங்கள் அணுக்கத் தொண்டு புரிவன. ஆதலின் அவனை நெருங்கிய முதல் வட்டமாக அவை உள்ளன. அவற்றைச் சூழப் பக்தர்கள் வட்டம் ; அவர் களைச் சுற்றி முனிவர்கள், அப்பால் கடைசிச் சுற்று தேவர்கள். பல திருமதில்களுக்கிடையே கோயில் இருப்பதுபோல அகச்சுற்றில் பூத கணமும் புறச்சுற்றுக்களில் ஏனைக் கணங்களும் இருக்க இறைவன் எழுந்தருளுகிறான்.

பூதமும் பல்கண மும்புடை சூழ...நின்ற எம் செல்வர்

சிவபெருமான் இந்த நிலவுலகத்துக்கே எழுந்தருளுகிறான் ; உயிர்க்கூட்டங்களுக்கு அருள் செய்ய வேண்டி வருகிறான். அப்போது தேவலோகத்தில் உள்ளவர்களும் இங்கே வந்து பூசிக்கிறார்கள். மக்களும் வழிபடுகிறார் கள். இறைவன் கயிலாயத்தில் எழுந்தருளும் போது புரியும் அருளைவிட, இப்பூமியில் எழுந் தருளும் போது புரியும் அருள் மிகுதியானது.

டாக்டர் தம் வீட்டில் செய்யும் சிகிச்சையை விட நோயாளிகள் உள்ள மருத்துவச் சாலே யில் புரியும் சிகிச்சைதான் அதிகம். அது போல இந்தப் பூமி சிவன் உய்யக் கொள்வது என்று மாணிக்கவாசகர் பாடுகிருர். ஆகையால் சிவபெருமான் என்னும் காமதேனு, பால் கறக்கும் கொட்டில் நிலவுலகம் என்று உணர்ந்து தேவர்கள் இங்கே வந்து வழிபடுகிருர்கள். அதனுல் பூமியும் விண்ணும் உடன்பொருந்து கின்றன. அந்த இரட்டைகள் இணேகின்றன.

பூமியும் விண்ணும் உடன்பொருந்த
நின்றஎம் செல்வர்

இறைவன் எப்படி இருக்கிருன்? அவனி டத்தில் சீத நிலா வீசும் திங்கள் இருக்கிறது ; வெப்பம் மிக்க தழலும் இருக்கிறது. முடியில் திங்களும் கரத்தில் அங்கியும் உள்ளன. அவனே தண்மையும் வெப்பமும் உடையவனுக இருக்கிருன். தன்னே வந்து புகலடைந்தார்க்குத் தண்ணியனுகவும் பகைத்தார்க்கு வெம்மையை உடையவனுகவும் இருக்கிருன். சீதம், வெம்மை என்ற இரட்டையையும் அவனி டம் பார்க்கிருேம்.

சீதமும் வெம்மையும் ஆகி
நின்றஎம் செல்வர்

அவன் எப்போதும் சீருடன் இருக்கிருன். அவன் அருளே நிரம்பவுடைய செல்வன். ஐசு வரியம் என்பதே, ஈசுவரனுகிய அவன் வழங்கு வதனுல் அந்தப் பெயரைப் பெற்றது. அவனேப் போன்ற செல்வன் யாரும் இல்லே. மற்றச் செல்வர்களின் செல்வம் வரும், போகும்; அதற்கு வரவுண்டு, செலவுண்டு ; லாபம் உண்டு, நஷ்டம் உண்டு. ஆனுல் அவனுடைய திருவுக்கு அந்த இரண்டும் இல்லே. 'சென்று அடையாத திருவுடைய' செல்வன் அவன். அவனேத் தலேவனுகப் பெற்றவர்களுக்கு என்ன குறை? ''எங்கள் பிரபு'' என்று சொல்லிச் சொல்லிப் பெருமைப் படலாமே ; அப்படித் தான் பெருமைப்படுகிருர் ஞானசம்பந்தர்.

பூதமும் பல்கண மும்புடை சூழப்
பூமியும் விண்ணும் உடன்பொ ருந்தச்
சீதமும் வெம் மையும் ஆகிச்
சீரொடு நின்றஎம் செல்வர்

இனி அந்தச் செல்வர் வேட்களத்தில் இருக்கிருர் என்று சொல்ல வருகிருர். வேட் களத்தைப் பற்றிச் சொல்லும் போதும் சில இரட்டைகளேச் சொல்கிருர். திருவேட்களம் கடற்கரையில் இருக்கிறது. கடலில் அலேகள் சுருண்டு மடிந்து மோதும்; அந்தக் கரையில் சிறிய சோலே இருக்கும். அலேபெருகி வரு வதை ஓதம் என்பர் ; கடற்கரைச் சோலேக்குக் கானல் என்று பெயர். ஓதமும் கானலுமாகிய இரண்டும் உள்ள கடற்கரை அது.

ஓதமும் கானலும் சூழ்தரு வேலே

அந்தக் கடற்கரையில் திருவேட்களம் இருக்கிறது. அந்த ஊருக்குள்ளே போய்ப் பார்த்தால் வேதகானம் கேட்கிறதாம்! அந்தணுளர்கள் இறைவனே மனத்தில் தியா னித்து உரிய சுரத்தோடு வேதத்தை ஓது கிருர்கள். உள்ளம் கலந்து வருகிறது வேத கானம். உள்ளம் ஒன்றிப் பாடாவிட்டால் வேத கானத்துக்குப் பயனில்லே. பலரும் சேர்ந்து ஓதுவதனுல் அந்த ஒலி எழுச்சியாக ஒலிக்கிறது. அது மட்டுமா? வேத முறைப்படி வேள்விகளும் செய்கிருர்கள். நாள்தோறும் அவர்கள் அக்கினி காரியம் செய்கிருர்கள். இந்த வேள்வி என்றும் நிற்பதே இல்லே.

உள்ளம் கலந்து பாடும் வேதகானமும் வேள்வியும் இடையீடு இல்லாமல் நாள்தோறும் நிகழ்கின்றன. வேதத்தையும் வேள்வியையும் இணேத்துச் சொல்வது மரபு.

''வேத வேள்வியை நிந்தனே செய்துழல்'' என்பது ஞானசம்பந்தர் திருவாக்கு. ''வேத மும் வேள்வியும் ஆயினுர்க்கு'' என்பது மணி வாசகம். வேதகானமும் வேள்வியும் நீங் காமல் நிகழும் வேட்கள நகரில் மேலே சொன்ன செல்வன் எழுந்தருளியிருக்கிருன் என்று பாட்டை முடிக்கிருர் சம்பந்தப் பெருமான்.

பூதமும் பல்கணமும்புடை சூழப்
பூமியும் விண்ணும் உடன்பொருந்தச்
சீதமும் வெம்மையும் ஆகிச்
சீரொடு நின்றஎம் செல்வர்,
ஓதமும் கானலும் சூழ்தரு வேலே
உள்ளம் கலந்திசை யால்எழுந்த
வேதமும் வேள்வியும் ஓவா
வேட்கள நன்ன கராரே!

பூதகணங்களும் அமரர் கணம் முதலிய வேறுபல கணங்களும் தம்மைச் சுற்றிச் சூழ, பூமியிலுள்ள மக்களும் விண்ணுலகத்துத் தேவரும் ஒன்ருகிச் சேர, குளிர்ச்சியும் வெப்பமும் ஆகி, சிறப்போடு என்றும் நிலே பெற்று நின்ற செல்வராகிய சிவபெருமான், அலேப்பெருக்கும் சோலேயும் உடைய கடற் கரையில் உள்ளதும், உள்ளம் கலந்து இசை யோடு எழுந்த வேதகானமும் வேள்வியும் என்றும் நீங்காததுமாகிய, வேட்களம் என்னும் நல்ல திருப்பதியில் எழுந்தருளியிருக்கிருர்.

பூமி, விண் : ஆகுபெயர்கள்; அவற்றில் வாழ்வோரைக் குறித்தன. சீர்-பெருமை. ஓதம்-அலேப்பெருக்கு. கானல்-கடற்கரைச் சோலே. இசையால்-இசையோடு ; ''தூங்கு கையா னேங்கு நடைய'' என்பதுபோல, ஆல் ஒடு என்னும் பொருளில் வந்தது. எழுந்த-எழுச்சிபெற்றுத் தோன்றிய. நன்னகர்-நல்லதலம் ; நகர் என்பதற்குக் கோயிலென்றும் ஒரு பொருள் உண்டு. ஆதலின் வேட்களத்தில் உள்ள நல்ல திருக்கோயிலில் எழுந்தருளியிருக் கிருர் என்றும் பொருள் கொள்ளலாம்.

இந்தப் பாசுரத்தில் பூதகணம்,பிறகணம் என்ற இரட்டையும், பூமியும் விண்ணும் என்ற இரட்டையும், சீதமும் வெம்மையும் என்ற இரட்டையும், ஓதமும் கானலும் என்ற இரட்டையும், வேதமும் வேள்வியும் ஆகிய இரட்டையும் வந்துள்ளன. அவற்றில் இன மாக உள்ளவை பூதகணமும் பிறகணமும், ஓதமும் கானலும், வேதமும் வேள்வியும் ; மாருக உள்ளவை பூமியும் விண்ணும் ; சீதமும் வெம்மையும்.

இந்தத் திருப்பாட்டு முதல் திருமுறையில் வருவது.

**

# திருஈங்கோய்மலைக் காட்சிகள்

திரு. ம. அ. முருகேசன், பி.ஏ., பி.எல்., அவர்கள்

**பதினொன்றும் திருமுறை :**

சைவ சமயத் தோத்திரப் பாடல்கள், பன்னிரண்டு திருமுறைகளாக வகுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பதினோராம் திருமுறையைத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பிகள். இதில் திருவாலவாயுடையாரின் திருமுகப் பாசுரம் முதல் 40 பிரபந்தங்கள் அடங்கியுள்ளன. தோத்திரப் பாடல்களும் சாத்திரப் பாடல்களும் சுவையற்ற வறட்சியான இலக்கியங்கள் என்ற தவறான எண்ணம் ஒருசில மக்களிடையே இருந்துவருகிறது. ஆனால் ஊன்றிப் பார்க்கின், அவைகள் சிறந்த கவிதை இலக்கியப் படைப்புகள் என்பது விளங்கும். பதினோராம் திருமுறை என்றதும், அதில் அடங்கிய காரைக்கால் அம்மையார் பதிகங்களும், நக்கீரர் ஆக்கிய திருமுருகாற்றுப்படையும் பிறவுமே, நம் நினைவுக்கு வருகின்றன. எனினும், இவை தவிரவும் பல அரிய இனிய நூல்களையும், பதினொன்றும் திருமுறை தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது.

**ஈங்கோய்மலை :**

''காலைக் கடம்பர், மத்தியானச்சொக்கர், மாலைத்திருஈங்கோய்நாதர்'' என்பது ஆன்றோர் வாக்கு. ஒரேநாளில் இம்மூன்று மூர்த்திகளையும் வழிபடுவது மிகப் பயனுடையது என்பது, இந்த வாக்கால் தெரியவருகிறது. மூன்றாவதாகச் சொல்லப்பட்டிருக்கும் திருஈங்கோய் நாதர், திருஈங்கோய்மலையில் எழுந்தருளி இருக்கின்றார். இம்மலை திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் உள்ளது. ''திருவேங்கிமலை'' என்று மருவி வழங்கப்படுகிறது. இம்மலை குறித்து எழுபது பாடல்களைத் ''திருஈங்கோய்மலை எழுபது'' என்று நக்கீரர் பாடி இருக்கின்றார். இது பதினோராந் திருமுறையில் தொகுக்கப்பட்ட நூல்களுள் ஒன்று. திருமுருகாற்றுப்படை பாடிய சங்க காலப் புலவர் நக்கீரரும், திருஈங்கோய்மலை எழுபது முதலிய மற்றப் பதிகங்களைப் பாடிய நக்கீரரும் ஒருவரே என்றும், வேறு வேறானவர் என்றும் இரு கருத்துக்கள் நிலவுகின்றன. சங்க இலக்கியத்திற்கே தனிச் சிறப்பைத் தரும் இயற்கை வருணனையும், சொற்செறிவும் 'திருஈங்கோய்மலை எழுபதின்' சிறப்பு அம்சங்களாகும். இம்மலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் சிறப்புக்களும் திருவிளையாடல்களும் அமைந்த இந்நூலில் அம்மலையின் வளமும், சிறப்பும் பெருமளவில் பேசப்பட்டுள்ளன. ''நவில்தொறும் நூல் நயம்'' என்றாற்போல், படிக்கப் படிக்கத் தித்திக்கும் கவிதை வளம் இந்நூலில் நிறைந்து விளங்குகின்றது. அம்மலையின் நக்கீரர் கண்ட காட்சிகளில் சிலவற்றை நாமும் காண்போம்.

**மகளிரும் மான்குழவியும் :**

*(1)* கூட்டம் கூட்டமாக மான்கள் மலை எங்கும் ஓடுகின்றன. கூட்டத்தை விட்டு ஒரு இளமான், பிரிந்துபோன தன் கூட்டத்தை எண்ணி ஏங்குகிறது. மயங்கியவாறு வழி தவறி வந்த அந்த இளமான் குறமகளிர் வசிக்கும் குடில்கள் பக்கமாக வந்து விடுகிறது. குடில்களிலே இருக்கும் குறமகளிர் அம்மானின் நிலைகண்டு இரங்கி அதற்கு ஆதரவு காட்டுகின்றனர். தாய்க்குலமாதலால் அவர்களுக்கு அந்த இளமானின் மனத்துயருடன் பசித் துயரமும் உள்ளத்தைத் தொடுகிறது. தாயன்பு மீக்கூரச் சந்தன மரத்தின் இலையைப் பறித்துத் தேனில் குழைத்து வளை அணிந்த தம் கைகளால் அவ் இளமானுக்கு ஊட்டுகின்றனர். இந்தக் காட்சியைக் கவிதையிலே பார்ப்போம்.

''அந்தஇள மான்குழவி ஆயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்துக் குறமகளிர்—
சந்தின்
இலைவளைக்கை யால்கொடுக்கும் ஈங்கோயே
மேரு
மலைவளைக்கை வில்லி மலை''

**களிறும் பிடியும் :**

*(2)* மலைச் சாரலிலே யானைக் கூட்டங்கள் உலவுகின்றன. களிறும் பிடியும் கூடிக் களிக்கின்றன. அவைகளில் ஒருபிடி ஊடிக்கொண்டு போய்த் தனித்து உறங்குகிறது. அதன் களிறு அதைத் தேடிக்கொண்டுபோய் நல்ல கனிகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து அதன் ஊடலைத் தணிக்கிறது.

''ஊடிப் பிடிஉறங்க ஒண்கதலி வண்கனிகள்
நாடிக் களிறு நயந்தெடுத்துக்-கூடிக்
குணமருட்டிக் கொண்டாடும் ஈங்கோயே
வானோர்
குணமருட்டும் கோளரவன் குன்று''

## கணையும் கன்னிமானும்

(3) இன்னுமொரு காட்சி. இம் மலைச் சாரலிலே எயினர் வாழ்கின்றனர். அக்கூட்டத்தின் காளை ஒருவன் தன் துணைவியைப் பிரிந்து வில்லேந்தி வேட்டைக்குச் செல்கின்றான். கையில் வில் சுமந்து சென்றாலும், அவன் மனம் காதலியைச் சுமந்து செல்கின்றது. அம்மலையில் உள்ள இயற்கை வளங்கள் எல்லாம் அவன் காதலியின் வனப்பையே நினைவூட்டுகின்றன. அவள் நினைவாகவே வில்லைச் சுமந்து அலைகின்றான். எந்த வேட்டையும் ஆடிய பாடில்லை. வேட்டையில் மனம் இருந்தால் அல்லவோ, அதற்கான தொழில் முறை வரும்? மனம் எல்லாம் குறத்தியின்பால் செல்ல, வெற்று நோக்கோடு அலையும் அவனுக்கு முன்பாகக் கன்னிமான் ஒன்று வந்தது. அதைக்கண்ட வேடனுக்கு வேட்டை நினைவு வந்து, வில்லை வளைத்து நாண்பூட்டி அம்பைத் தொடுக்கின்றான். குறிபார்க்கும்போதில், கன்னிமானின் அச்சத்தால் மருண்ட பார்வை கொண்ட கண்கள், அவனுடைய குறத்தியின் அழகிய மருட்சிமிக்க கண்களை நினைவூட்டுகின்றன. தன் தலைவியின் கண்களை நினைத்துக் கொண்டு, அதன்மீது அம்பு செலுத்தாமல் நின்றுவிடுகின்றான். மானையும் நகரவிட்டு விடுகின்றான். இதோ பாட்டு.

எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்
கையிற் கணைகளைந்து கன்னிமான்—பையப்போ
என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்
சென்றன்று வென்றான் சிலம்பு''

இந்தப் பாட்டிலே இன்னொரு நயம். திருஈங்கோய்மலை சோழ நாட்டிலே இருந்தாலும், பாடிய புலவர் ஆகிய நக்கீரர், பாண்டி நாட்டினருக்கே உரித்தான 'பைய' என்ற சொல்லைக் கையாண்டிருப்பதைக் கவிதையிலே காண்கின்றோம். இங்கே ''பையவே சென்று பாண்டியற் காகவே'' என்ற திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடல், நம் நினைவுக்கு வருகின்றது.

## கடுவனும் இலவம்பூவும்

(4) மலைச்சாரலில் இன்னொருபுறத்திலே இலவ மரங்கள் ஓங்கிப் பரந்து வளர்ந்திருக்கின்றன. அம் மரங்களிலே சிவந்த நெருப்புத் துண்டுகளாக அரும்புகளும் மலர்ந்திருக்கின்றன. அறிவுக் கொழுந்தாகிய ஒரு ஆண் குரங்கு அந்த அரும்புகளைக் கண்டு, அவைகள் நீறு பூத்த நெருப்பென்று கண்டுபிடித்து விடுகின்றது. ஆப்பைப் பிடுங்கிய இனமாயிற்றே. நெருப்புத் துண்டை அப்படியே விட்டுவிடலாமா? விட்டு விட்டால் தன் இயற்கைக் குணத்துக்கு ஊறு அல்லவா? கொள்ளிக் கட்டையை ஊதித் தீப் பொறி பறக்கச் செய்து காட்டை எரிக்க வேண்டாமா? ஆகவே அந்த நீறுபூத்த நெருப்பை வாயால் ஊதிக் களைத்துப்போய், விசிறி தேடி மூங்கில் இலைகளை ஒடித்து வந்து வீசுகிறது.

ஓங்கிப் பரந்தெழுந்த ஒள்இலவத் தண்போதைத்
தூங்குவதோர் கொள்ளி எனக்கடுவன்—மூங்கில்
தழையிறுத்துக் கொண்டோச்சும் ஈங்கோயே சங்கக்
குழையிறுத்த காதுடையான் குன்று''

'தூங்குவதோர் கொள்ளி' என்று படிக்கும் போது நமக்கு விநோதரச மஞ்சரியில் வரும் பரமார்த்த குருவின் கதையும், நெருப்பைக் கிளறும் குரங்கின் முயற்சியும், அதன் இயற்கைக் குறும்பும் நினைவுக்கு வருகின்றன. கவிதையின் சரளமான நடை, நம்மை வாய் விட்டுப் படிக்கத் தூண்டுகிறது.

## எயின மகளிரும் தினைமாவும்

(5) எயினர் சேரி ஒன்றில், மகளிர் உணவு அருந்த எண்ணினர். கல்லுரலிலே அவர்கள் தினை இடித்தனர். இடிப்பதற்கு உலக்கை வேண்டாமா? மரம் செதுக்கி இருப்புப்பூண் போட்டு உலக்கை செய்ய வாய்ப்பில்லை. அதைத் தேடவும் தேவையில்லை. இருக்கவே இருக்கிறது குறவன் ஒடித்து வந்த யானைத் தந்தங்கள். அத்தந்தங்களால் தினைமாவு இடிக்கின்றனர். குறவன் கை நிறைய நீர் மொண்டு வருவதுபோல் கொம்புத் தேன் கொண்டு வருகிறான். தினை மாவைத் தேனில் கலந்து உண்ணுகிறார்கள்

''கருங்களிற்றின் வெண்கொம்பாற் கல்லுரல்வாய் நல்லார்
பெருந்தினைவெண் பிண்டி இடிப்ப-வருங்குறவன்
கைக்கொணரும் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே
மைக்கொணருங் கண்டன் மலை''

(தொடரும்)



# வில்லிபுத்தூரார் பாரதம்

'சிலம்புச் செல்வர்'
## திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்
மேலவைத் தலைவர்

வியாசர் வேத வாக்குகளைத் தொகுத்ததும், அத்தொகுப்பை நான்காக வகுத்ததும், ஐந்தாவது வேதம் எனப்படும் மகாபாரதத்தைப் படைத்ததும், பதினெண் புராணங்களை இயற்றியதும் ஒரு மனித ஆயுளில் முடியக் கூடியவையல்ல. ஆனால், தெய்வாம்சம் பொருந்திய மகாகவியான வியாசர் அந்த அற்புதத்தைத் தமது ஆயுளில் செய்து முடித்திருக்கிறார்.

வியாச பாரதத்தில் கதைக்குள் கதையாக வரும் துணைக்கதைகள் ஏராளம். அதனால், துணைப் பாத்திரங்களும் பலப்பல நூற்றுக் கணக்கில் படைக்கப்பட்டிருக்கின்றன. பாத்திரங்களிலே அந்தணர்களும் அரசர்களுமே பெருமைப்படுத்தப்படுகின்றனர். வணிக, வேளாள வருணத்தினர் பெருமைக்குரிய பாத்திரங்களாகப் படைக்கப்படவில்லை.

வியாசர் காலத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வருணங்கள் நடைமுறையில் இருந்தன. அவ் வருணங்களிடையே உயர்வு தாழ்வுகளும்—அதாவது, இழிவு சிறப்புகளும் இருந்தன. அரசர்களை விடவும் அந்தணர்கள் உயர் வருணத்தவராகக் கருதப்பட்டனர் என்று அறிகிறோம். நால் வருணங்களிடையிலான உயர்வு தாழ்வு சமுதாய நியதியாக மட்டுமல்லாமல், நீதியாகவும் வலியுறுத்தப்படுகின்றது.

அரசர்களிலே மானிடரல்லாத அசுரர்களையும் பார்க்கிறோம். அவர்கள் அந்தணர்களைக் கொடுமைப்படுத்துவதையே கொள்கையாகக் கொண்டுள்ளனர். பாரதக் கதையில் ஆங்காங்கே ஏற்படும் திருப்பங்களுக்கு அசுரர்களிடமுள்ள அந்தணத் துவேஷமும் காரணமாகின்றது. வியாசரால் அறிமுகப்படுத்தப்படும் ரிஷிகள் வரங் கொடுப்பதிலும் சபிப்பதிலும் வல்லவர்கள். இப்படி, வரங்கொடுப்பதும் சபிப்பதுமான நிகழ்ச்சிகளே கதைக்குத் திருப்பங்களாக அமைகின்றன. வரமளித்தலும் சபித்தலும் நம்ப முடியாத கற்பனைகளென்றாலும் கதையைச் சுவைபடுத்துகின்றன. அவை இல்லாவிட்டால், பதினெட்டுப் பருவங்களைக் கொண்ட பாரதக் கதை முழுவதையும் பொறுமையாகப் படிக்க முடியாது. வியாசருக்கு இருந்த கற்பனா சக்தியைக் கண்டு வியக்க வேண்டியிருக்கிறது. ''எண்ணற்ற முத்துக்களும், இரத்தினங்களும் கிடக்கும் மகா சமுத்திரத்தைப் போன்றது மகாபாரதம்.''

மகாபாரதக் கதையில் அந்தண-அரச வருணங்களிடையில் உயர்வு மனப்பான்மை காரணமாகப் பல குட்டிப் போர்கள் நிகழ்கின்றன. வருணச் சண்டைகள் மலிந்து காணப்படுகின்றன. இதற்கு ஆன்றவிந்தடங்கிய சான்றோரான முனிவர்கள்கூட விலக்காக இல்லை.

பாரதப் பெரும்போரில் பயன்படுத்தப்படும் கருவிகள் மனித ஆற்றலால் படைக்க முடியாதவை. போர்முறைகளும் அறிவுக்கு எட்டாத அற்புதங்களாகவே அமைந்துள்ளன. கற்பனைக்கு எட்டாதவையென்றும் சொல்லலாம். ஆனால், மகாகவியான வியாசரின் கற்பனைத் திறம் தெய்விகமானதல்லவா! அந்த வகையில் உலகக் கவிஞர் மத்தியிலே வியாசர் தனியிடம் பெற்று விளங்குகின்றார். அவருக்கு அவர்தான் இணை என்று சொல்லலாம்.

சங்க இலக்கியங்கள் சிலவற்றிலே மகா பாரதக் கதை நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. அதனால், வியாசரைக் கடைச் சங்கத்திற்கு முற்பட்டவராகக் கருதலாம். சங்க இலக்கியம் எதிலும் வருணப் பூசல் வருணிக்கப்படவில்லை. நால்வருணப்பாகுபாடு தொல்காப்பியர் காலந்தொட்டே தமிழகத்தில் நிலவிய தென்றாலும், அவற்றிடையே உயர்வு தாழ்வு—அதாவது, இழிவு சிறப்பு இருக்கவில்லை. வருணப் பாகுபாடு கடமை பற்றியதாக இருந்ததன்றி, உரிமை பற்றியதாக இருக்கவில்லை. அதனால், வருணங்களிடையே பூசல் நிகழக் காரணமில்லை. க்ஷத்திரிய குலத்தையே அழித்து முடிக்குமளவுக்கு தமிழக அரசர்களிடையே சகோதரச் சண்டை நிகழ்ந்ததாகத் தமிழ் இலக்கியங்களிலே செய்தி இல்லை. சகோதர வாஞ்சைக்குத் தன் தம்பிக்குக் குமணன் தலைகொடுக்க முன் வந்த நிகழ்ச்சி சான்றாகும்.

அமானுஷ்யக் கற்பனைக்குத் தமிழ்க் கவிஞர்களும் விலக்கல்ல. அவர்கள் கற்பனைத் திறனிலே வறிஞர்களல்லர். ஆயினும், வியாசரைப்போலப் பாட்டுடைத் தலைவர்-தலைவியரை அமானுஷ்யப் பிறப்புகளாக அவர்கள் அறிவிக்கவில்லை. இதற்கு அகத்திணை இலக்கியங்

களே சான்றாகும். சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற காப்பியங்களிலேயும் நாயக- நாயகியர் மனிதத் தன்மைக்கேற்பவே பிறக்கின்றனர்.

வியாச முனிவர், பாண்டவர்-கௌரவர் போரைத் தம் காலத்து நிகழ்ச்சியாகவே கூறுகின்றார். பாரதக் காப்பியத்திலே அவர் தம்மையும் ஒரு பாத்திரமாக்கிக் கொண்டிருக்கிறார். காலத்தால் வியாசருக்கு முற்பட்டவரான வான்மீகியும் இராமாயணக் கதையைத் தம் காலத்தில் நிகழ்ந்ததாகக் குறிப்பிட்டிருப்பதோடு, அந்தக் காப்பியத்தில் தம்மையும் ஒரு பாத்திரமாக்கிக் கொண்டிருக்கிறார்.

இவ்விரு மகாகவிகளைப் பின்பற்றித் தானோ என்னவோ, இளங்கோவடிகளும் சிலப்பதிகாரக் கதை தம் காலத்தில் நிகழ்ந்ததாகக் கூறியிருப்பதோடு, வஞ்சிக்காண்ட நிகழ்ச்சிகளில் தம்மையும் ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார். சிலப்பதிகாரக் கதை உண்மையில் நிகழ்ந்த வரலாறு எனப்படுவதால், அதனோடு அடிகளாருக்குள்ள தொடர்பையும் உண்மை நிகழ்ச்சியாகக் கருத இடமிருக்கிறது.

தமிழ் மொழியானது தனக்கெனத் தனியாக ஒரு இலக்கணப் பாரம்பரியத்தைப் பெற்றிருப்பது தமிழர் செய்த பெரும் பேறாகும். வியாச பாரதம் கற்பனையழகு நிறைந்த பிரம்மாண்டமான மாளிகையென்றாலும், அதற்கும் தமிழ் இலக்கியப் பாரம்பரியத்திற்கும் நடுவேயுள்ள இடைவெளி அதிகமாகும். இந்த இரு வகை இலக்கியப் பாரம்பர்யங்கள் இருவேறு நாகரிகங்களைக் கொண்டனவாகும்.

சிலப்பதிகாரக் காலம்வரை வடமொழிக் காப்பியங்களான இராமாயணமும் பாரதமும் தமிழரால் அதிகம் போற்றப்படவில்லை. சங்க இலக்கியங்களிலே அங்குமிங்குமாக இராமாயணக் கதை எடுத்தாளப்பட்டுள்ள தென்றாலும், இராமன் தமிழர் வழிபடும் தெய்வமாகக் காட்டப்படவில்லை. இராமாயணக் கதையை விட மகாபாரதம் மிகுதியாக எடுத்தாளப்படுகிறது. மகாபாரதப் போரிலே சேர மன்னன் உதியஞ் சேரலாதன் போரிட்ட இரு தரப்பினருக்கும் சோறு வழங்கியதாகப் புறநானூற்றில் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவர் பாடியுள்ளார். அப்பாடல் வருமாறு:

அலங்குஉளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈர்-ஐம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்
பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்
தோய்!
(புறம் 2).

இந்தப் பாடல் பாரதப் போரில் தமிழ் வேந்தனான உதியன், பாண்டவர் சார்பிலோ, கௌரவர் சார்பிலோ கலந்து கொண்டதாகக் கூறவில்லையென்பது நினைவிற் கொள்ளத்தக்கதாகும். ஆம்; அரச வமிசத்தையே அழித்தொழிக்கும் சகோதரச் சண்டையைத் தமிழ் வேந்தர்கள் வெறுத்திருக்கலாம். ஆயினும், போர் நடந்த காலத்தில் உணவின்றித் தவித்தவர்களுக்கு மனிதாபிமானம் காரணமாகச் சோறு அளித்தனர். உதியன் சோறு அளித்தது, போரில் நேரடியாகக் கலந்து கொண்ட வீரர்களுக்கா? அல்லலுற்றுத் தெற்கு நோக்கி வந்த அகதிகளுக்கா? என்பது மேற்சொன்ன பாட்டில் தெளிவாகக் கூறப்படவில்லை. அகதிகளுக்கு என்று கொள்வதே பொருந்துவதாக இருக்கும்.

சங்க இலக்கியங்களில் சிலவற்றுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார் என்பவர், பாரதத்தை உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகப் பாடியதாகக் கருதப்படுகிறது. இதனால், 'பாரதம் பாடிய' என்ற அடைமொழியுடன் பெருந்தேவனார் அழைக்கப்படுகிறார். அதன் செய்யுள்கள் சில பிற்கால உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன. மற்றப்படி நூல் முழுவதும் மறைந்து போனதாகத் தெரிகிறது.

உண்மையில், சங்க காலத்தில்தான் பெருந்தேவனார் பாரதம் பாடினாரென்றால், அது சிலப்பதிகாரத்திற்கு முற்பட்ட காப்பியமாக-அதாவது, தமிழில் தோன்றிய முதல் காப்பியமாகக் கொள்ளத்தக்கதாகும். ஆனால் இது வெறும் மயக்கமாகும். சங்க இலக்கியப் பாடல்கள் படைக்கப்பட்ட காலம் வேறு; அவை தொகுக்கப்பட்ட காலம் வேறு. இரண்டிற்கும் இடைவெளி அதிகம் இருக்க வேண்டும். பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடியது சங்க காலப் பாடல்கள் பத்துப் பாட்டும் எட்டுத் தொகையுமாகத் தொகுக்கப்பட்ட காலத்திலாகும். அது, சிலப்பதிகாரத்திற்குப் பிற்பட்ட காலமாகத்தான் இருக்க வேண்டும். பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்களின் நடை சங்க இலக்கியப் பாடல்களோடு ஒத்திருப்பதால், அவற்றைப் பாடிய பெருந்தேவனார் சங்க காலப் புலவராகவே கருதப்பட்டிருக்க வேண்டும்.

முதன் முதலாகச் சிலப்பதிகாரத்திலேதான் பாரதக் கதையின் செய்திகள் அதிக அளவில் இடம் பெறுகின்றன. பாரதக் கதையில் வரும் கண்ணன் முல்லை நிலத் தமிழர் போற்றும் கடவுளாக வருணிக்கப்படுகிறார். சிலப்பதிகார நாயக நாயகியரான கோவலனும் கண்ணகியும், கண்ணனும் நப்பின்னையுமாக இடைக்குல மாதரியால் வருணிக்கப்படுகின்றனர். ஆய்ச்சியர் குரவைப் பாடல்களிலே பாரதக் கதையின் செய்திகள் மிகுதியாகக் கூறப்படுகின்றன. குறிப்பாக,

''மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை; நூற்றுவர்பால் நாற்றிசையும்
போற்றப்
படர்ந்தா ரணம்முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராயணா! வென்னா நாவென்ன நாவே!''

என்னும் பாடலில், பாண்டவருக்காகக் கௌரவர்களிடம் கண்ணன் தூது போன நிகழ்ச்சி கூறப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் நடனக் கலைபற்றிக் கூறுமிடங்களிலும் பாரதக் கதையில் வரும் நிகழ்ச்சிகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

சேரன் செங்குட்டுவன் வடவாரியருடன் நடத்திய போர் மகாபாரதப் போருடன் ஒப்பிடப்படுகின்றது. சிலப்பதிகார காலத்திற்குப் பின் தமிழகத்தில் வடபுலத்தார் அரசியல் ரீதியில் ஆதிக்கம் பெற்றனர். இளங்கோவடிகளுக்கும் வில்லிபுத்தூராருக்கும் இடைப்பட்ட காலம் ஆயிரம் ஆண்டுகளாகும். அந்தக் காலத்திலே தமிழகத்தில் களப்பிரர், சாளுக்கியர், பல்லவர் போன்ற தமிழரல்லாதார் ஆதிக்கஞ் செலுத்தினர். அவர்கள் திட்டமிட்டுப் பாரதக் கதைக்குத் தமிழ் நாட்டில் செல்வாக்குத் தேடினர். பாரதக் காப்பிய நாயக நாயகியரைத் தமிழர் வழிபடும் கடவுளராகச் செய்தனர்.

தமிழ் நாட்டை ஆண்ட தமிழரல்லாதாரிலே வியாசபாரதத்திற்குப் பட்டி தொட்டிகளிலெல்லாம் செல்வாக்குத் தேடியவர்கள் பல்லவர்களேயாவர். கி. பி. 7-ஆம் நூற்றுண்டில் மகேந்திர பல்லவன் சமணத்தை விட்டுச் சைவத்திற்கு வந்த பின்னர், அவனும் அவன் வழிவந்தோரும் தமிழ்மொழியின்-தமிழர் பண்பாட்டின் தனித் தன்மையை மாற்றிடத் தக்க வகையில் வடமொழியையும் அம்மொழியிலுள்ள மகாபாரதம் போன்ற இலக்கியங்களையும் தமிழகத்திலே பரப்புவதில் அக்கரை காட்டினர். பாரதக் காப்பிய நாயக நாயகியரைத் தெய்வங்களாகக் கருதி வழிபடும் வழக்கத்தையும் தோற்றுவித்தனர். இதற்கு வைணவத் தமிழர்களும் காரணமாவர். 7, 8, 9-ஆம் நூற்றுண்டுகளில் தமிழ் நாட்டின் பல ஊர்களில் பாரதக் கதை சொல்வதற்காகப் பல்லவர்கள் நிவந்தம் விட்ட செய்திகள் கல்வெட்டுகள் மூலம் கிடைக்கின்றன.

நான்மாடக் கூடலைத் தீக்கிரையாக்கிய கண்ணகியைக் கற்புக் கடவுளாக வழிபட்டுவந்த தமிழ் மக்கள்-பாஞ்சாலியை, 'ஐவருக்குந் தேவி அழியாத பத்தினி' எனப் புகழ்ந்து, அவள் பெயரால் கோவில்கள் அமைத்து, தீ மிதிக்கும் வழக்கமும் ஏற்படுத்தி, அவளை வழிபடலாயினர். கண்ணகியின் கோயில்களில் சிலவும் பாஞ்சாலியின் கோயில்களாக மாற்றப்பட்டிருக்கலாம்.

வடபுலத்தில்-குறிப்பாக, பாஞ்சாலத்தில் பாஞ்சாலிக்குக் கோயிலோ, வழிபாடோ இல்லை யென்பது நினைவில் கொள்ளத்தக்கதாகும். தமிழகத்தில் பத்தினி வழிபாடு நிகழ்ந்து வந்ததால், அதனைப் பாஞ்சாலி வழிபாடாக மாற்றுவது எளிதாக இருந்ததுபோலும்.

—தொடரும்.

## மதுரை அங்கயற்கண் அம்மை பதிகம்

ஞானம் பொழியுந் தண்முகிலே :
நாதங் கடந்த பரவெளியில்
நடிக்கும் பெருமான் மகிழ்மானே :
நாடு மடியார் தமக்கென்றுந்
தானம் பொழியுந் தனிமுதலே !
தழைக்குங் கருணைத் தடாதகையே !
தணியா மனத்தைத் தடுத்தநிறை
தவத்தோர் காணுந் தயாபரியே !

கானம் பொழியும் இசைமயமே
கருணை பூத்த கற்பகத்தீங்
கனியே கவலைக் கடல்கடத்துங்
கண்ணாரமுதே களிதுளும்ப
கானம் பொழியு மதுரைவளர்
மயிலே வருக வருகவே !
மறைகள் பரவும் அங்கயற்கண்
மணியே வருக வருகவே !

—கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

# சுசீந்திரம் கோவில்

[திரு. எஸ். கே. சுவாமி, நாகர்கோவில்]

கன்னியாகுமரி மாவட்டத்தில் அமைந்த வளமார்ந்த ஊர் சுசீந்திரம். நாகர்கோயிலிலிருந்து கன்னியாகுமரிக்குப் போகும் வழியில், பழையாற்றங்கரையில் இருக்கும் இவ்வூருக்குப் புகழும் பெருமையும் புனிதமும் தருவது இவ்வூரில் அமைந்துள்ள தாணுமாலயசுவாமி கோயில் ஆகும்.

## பெயர் வரலாறு :

பொய்த் தவ வேடம் கொண்டு, கவுதம முனிவரின் ஆசிரமத்துக்குள் நடுநிசியில் புகுந்து தேவேந்திரன் முனிபத்தினியானஅகல்யையை, வஞ்சித்துக் கெடுத்தான். இதையறிந்த முனிவர், இந்திரன் அழகான மேனியை அருவருப்பான தாக ஆகும்படி சாபம் கொடுத்தார். இதனுல் அவமானமடைந்த இந்திரன், நான்முகனைத் தொழுது வணங்கி, குறையிரந்து இறைஞ்சினுன். பிரமனின் போதனைப்படி ஞானவனம் சென்று இறைவனிடம் பிரார்த்திக்கச் சென்ருன்.

ஞான வனம்தான் இப்பொழுதுள்ள சுசீந்திரம் என்னும் ஊர் ஆகும். இங்கே மும்மூர்த்திகளும் (சிவன், பிரமன், திருமால்) ஏகமூர்த்தியாகத் தான்தோன்றியாகக் காட்சி தருகிருர். இதனுல்தான் தாணு (சிவன்)—மால் (விஷ்ணு)—அயன் (பிரமன்) மூன்றும் இணைந்து தாணுமாலயன் சுவாமி ஆக காட்சி தருகிருர். அன்று ஞானவனமாக இருந்த இந்தப் புனிதமான இடத்திலுள்ள கோயிலும் சிறியதுதான். பின்னர் தமிழ்வேந்தர்களின் தாராள பொருளுதவியினுலும், பக்தர்களின் ஆதரவாலும் மிகப் பெரிய கோயிலாக—கம்பீரமாகக் காட்சி தருகிறது. தேரோடும் வீதிகள், அழகான தெப்பக் குளம், கம்பீரமான கோபுரம், விசாலமான மண்டபங்கள் எல்லாம் அமைக்கப்பட்டு, குமரி மாவட்டத்திலேயே பெரிய கோயிலாகத் திகழ்கின்றது.

இந்திரன் தவத்தை ஏற்ற தாணுமாலய சுவாமி அருள் பாலித்தார். இந்திரன் சுத்தப் படுத்தப்பட்டான். அதனுல் இதற்கு சுசீந்திரம் என்ற பெயர் வந்தது. சுசி என்ருல் சுத்தம் என்பது பொருள். சுசி இந்திரன்—அதாவது சுத்தம் கிடைத்த இந்திரன். அதனுல் இந்தக் கோயிலில் இறைவனின் அர்த்தசாம பூசையை இன்னும் இந்திரனே செய்து வருவதாக ஐதீகம்.

நாஞ்சில் நாடானது நீண்ட நெடுங்காலம் பாண்டிய அரசர்களின் ஆட்சியிலிருந்து வந்தது. கூவையர் குலத்தில் தோன்றிய வேணுட்டார் என்று அழைக்கப்படும் சேர மன்னன், பாண்டியனேடு போர் புரிந்து வெற்றி பெற்ருன். அதனுல் நாஞ்சில் நாடும் சுசீந்திரம், கன்னியாகுமரி முதலிய கோயில்களும் சேர மன்னர்களுக்குக் கிடைத்தன. கல்வெட்டுக்களில் இந்தச் செய்தி காணப்படுகிறது. பழைய ஓலைச் சுவடியில் இது பற்றிய ஒரு பாடலும் கண்டெடுக்கப்பட்டது. இதை வெளிக்கொண்டு வந்தவர் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை அவர்கள்.

## கவிமணி சொன்ன பாடல் :

நான் அடிக்கடி கவிமணியைச் சந்தித்துக் கோயில்களைப் பற்றி உரையாடுவது உண்டு. கோயில்களைப் பற்றி அறிவதில் எனக்குள்ள ஆர்வத்தைக் கவிமணி, வெகுவாகப் பாராட்டுவார்கள்.

''எத்திசையும் புகழ்படைத்த கொல்லம் இருநூற்றுத்
தொண்ணூற்றி ரெண்டா மாண்டு
வெற்றிசெய்யும் கும்பத்தில் வியாழ நின்று விளங்கு
திங்களாவணி பதினென்ருந் தேதி
தத்திவிழும் பஃறுளி யாற்றினையுந்தள்ளி, தமிழ்ப்
பாண்டிராஜா சிங்கஏறனையும் வென்று
கொத்தலரும் பூஞ்சோலை நாஞ்சில்நாடும் கோட்டாறும்
கூவையர் கோன் கொண்டவாறே''

கொல்லம் 292க்குச் சரியான ஆங்கில வருடம் கி.பி. 1116. கூவையர் என்று சேரர்களை அழைப்பதுண்டு. திருவாங்கூர் ஸ்டேட்மானுவலில் ஆசிரியர் டி. கே. வேலுப்பிள்ளை, பி.ஏ., பி.எல். இதைக் குறிப்பிட்டுள்ளார்.

## கோபுரம் :

சுமார் ஏழு மைல் தூரத்திலுள்ளவர்கள் கூடக் கோயில் கோபுரத்தைக் காண முடியும். இதன் உயரம் 134.5 அடி. கம்பீரமான தோற்றம். அழகு வழியும் கலை நுட்பம் அமைந்த தெய்வத் திருவுருவங்களைக் கொண்டது. உச்சியில் பளபளவென்று மின்னும் கும்பங்கள். கோபுர வாசல் விசாலமானது. 5,400 சதுர அடி அளவில் அமைக்கப்பட்ட அடி மட்டம்.

நம் தமிழ் நாட்டில் பழங்காலத்தில் கோயில்களே பள்ளிக்கூடங்களாகவும், கலை வளர்க்கும் கழகங்களாகவும், நீதி வழங்கும் நிலையங்களாகவும், மருத்துவமனைகளாகவும், போர்க் காலத்தில் புகலிடங்களாகவும் மற்றும் பயன்பட்டு வந்தன. இந்த நிலைகளையெல்லாம் சுசீந்திரம் கோயிலில் இன்றும் காணலாம்.

### நாடக மன்றம் :

கோபுர வாசலுக்குச் சமீபத்தில் பிரமாத மான நாடக மன்றம் காட்சி தருகிறது. நாடகமே உலகம் அல்லவா. நாடகக் கலைஞர் களை உருவாக்கவும் ஊக்கம் தரவும் பயன்பட்ட மன்றம்; மன்றத்தின் முகப்பில் எழில் மிக்க இரு உருவங்கள் கைகூப்பி நிற்கின்றன. இந்தத் தோற்றம் மக்களை அஞ்சலி செய்து, அழைப்பது போலிருக்கின்றது. நாடக மண்டபத்தின் நீளம் 124 அடி. அகலம் 32 அடி. நாடகங்கள் மட்டுமல்ல, நாட்டியங்களும் அந்தக் காலத்தில் இங்கே நடப்பது உண்டு என்பதைக் கல்வெட் டுக்களிலிருந்து அறியலாம். கூத்தாண்டவர் —பிரமதாண்டவர் என்ற இரு நடனங்கள் நடத்தப்படுமாம். சிவராத்திரி நாடகம் என்று சொல்லப்படும் நாடகத்தில் தெய்விக நெறியை போதித்து, மக்களைச் சன்மார்க்கத்தில் ஈடுபட பல காட்சிகள் அமைந்திருக்கும். இதற்கென நட்டுவர்கள், ஆசான்கள், கலைஞர்கள் ஆகி யோர்களைக் கோயிலில் அமர்த்தப்பட்டிருக்கும். எனது சிறு வயதில், இந்தக் கோயில் நாடக மன்றத்தில் நடைபெற்ற பக்தி மிக்க சிவராத் திரி நாடகத்தைப் பார்த்திருக்கிறேன். கலை வாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களிடம் நான் ஒரு முறை இதுபற்றிச் சொன்னதுண்டு. அவர் ஓர் பிறவிக் கலைஞர் ஆனபடியால், சுசீந்திரம் கோயிலுக்கு வந்து நாடக மண்டபத் தின் அமைப்பைப் பார்த்து ரசித்ததோடு, நாடக சபைகள் இது மாதிரி அமைக்கப்பட வேண்டும் என்றும் எண்ணினார். இந்த எண்ணப் பொலிவினால் உந்தப்பட்ட என். எஸ். கிருஷ் ணன் அவர்கள் சென்னையில் தான் அமைத்த நாடக சபையின் அரங்கத்தின் முன்னர், கூப்பிய கரங்களோடு நிற்கும் நிழலுருவங்களைக் காட்ட ஏற்பாடு செய்தார்.

### பெரிய அநுமார் :

சுசீந்திரம் கோயிலில் எத்தனையோ எழில் மிக்க சிலைகளையும் தெய்வத் திருவுருவங்களையும் பார்க்கலாம். சிற்பக் கலை நுணுக்கங்கள் அமைந்த சிலைகளை, கோயில் பிராகாரத்தில் அங்கங்கே அமைத்து வைத்திருக்கிறார்கள். சண்டேசுவரர், நந்திதேவர், தட்சிணாமூர்த்தி திருவுருவங்கள் குறிப்பிடத் தக்கவை. கோயி லில் சித்திர சபைக்கு சமீபத்திலுள்ள விசால மான மண்டபத்தில் காணப்படும் அனுமான், கேட்ட வரம் உடனேயே கொடுக்கும் ராம பக்தனைக் கருதிப் பக்தர்கள் கூட்டம் மொய்த்து, பக்தி சிரத்தையுடன் பணிந்து அருள் பெற்று வருகிறார்கள். ஒரே கல்லில் மிக அழகாகச் செதுக்கப்பட்ட அநுமார் சிலையைக் கண்ட கலைஞர்கள் அசந்து விடுவார் கள். இந்த அநுமாரின் உயரம் 16.5 அடி. வெகு நுட்பமான சிற்ப வேலைப்பாடு. மென் மையான கல்லில் மின்னும் வீர அநுமார். அதி கம்பீரத் தோற்றம். அவருடைய பெரிய நீளமான முகத்திலும் கண்களிலும் ராமபக்திப் பிரவாகம் ததும்பி வழிவதைப் பார்க்கலாம். இந்தியாவிலேயே எந்தக் கோயிலிலும் இவ்வ ளவு பெரிய அளவில் அநுமார் உருவம் காணப் படவில்லை என்று டாக்டர் கே. கே. பிள்ளை, எம்.ஏ., பி.எச்டி. அவர்கள் எழுதியிருக்கிறார். சென்னை அடையாறு பிரமஞான சபைத் தலைவ ராயிருந்த டாக்டர் கஸின்ஸ், இந்தப் பெரிய அநுமார் உருவத்தைக் கண்டு வியப்பு கொண் டார்.

> அஞ்சிலே ஒன்று பெற்றான்,
> அஞ்சிலே ஒன்றைத்தாவி
> அஞ்சிலே ஒன்று ஆறாக
> ஆரியற் காக ஏகி
> அஞ்சிலே ஒன்று பெற்ற
> அணங்கைக் கண்டு அயலாரூரில்
> அஞ்சிலே ஒன்றை வைத்தான்
> அவனெம்மை அளித்துக் காப்பான்''

நெடுங்காலமாக இந்தப் பெரிய அநுமார் மண் ணுக்குள்ளே மறைந்து கிடந்தார். சில ஆண்டு களுக்கு முன்னர் கோயில் சிப்பந்திகள், கோயில் நிலத்தை சமப்படுத்தும் வேளையில், மெல்ல அநுமார் முகத்தைக் காட்டினார். பின்னர் கூப்பிய கரங்களையும் காட்டினார். சிலகாலம் அப்படியே விட்டுவிட்டார்கள். பின்னர் பொது மக்களின் ஒத்துழைப்பால் அதிகாரிகள் பெரும் முயற்சி எடுத்து, பெரிய அநுமாரை நகர்த்திக் கொண்டு வந்து பிரதிட்டை செய்தனர். ராமசுவாமி கோயிலுக்கு எதிரில் பொருத்த மான இடத்தில் கும்பிட்ட நிலையில் காட்சி தருகிறார்.

அநுமாருக்கு வடை மாலை அணிவித்து, முழுக் காப்பு சாத்தித் தினமும் பக்தர்கள் பூசித்து வருகிறார்கள். ஸ்ரீலஸ்ரீ அபேதானந்த சுவாமிகள், தனது பஜனை கோஷ்டியுடன் அநு மார் சன்னதியில் 41 நாட்கள் தோத்திரப் பாடல்களைப் பொழிந்தார். ஆஞ்சநேயர் சுவாமியை ''க்ஷிப்ர பிரசாதி'' என்று கூறுவார்கள். அதாவது பக்தர்களுக்குக் காலம் தாழ்த் தாமல் அருள் பாலிப்பவர் என்பது பொருள். இன்னும் இந்தக் கோயிலில் இசைத் தூண்கள், சித்திர சபை, மாக்காளை, எவ்வளவோ அற்புத மான கலைப் பொக்கிஷங்களும், நாயன்மார்கள் திருவுருவங்களையும் காணலாம். கைலாசநாதர் கோயிலில், ஒரு பாறை மீது கட்டப்பட்டிருப் பதையும் பார்க்கலாம். அந்தப் பாறையில் வட்டெழுத்துக்களில் பல சாசனங்கள் பொறிக் கப்பட்டுள்ளன. தொல்பொருள் ஆராய்ச்சி நிபுணர்களுக்கு இவையெல்லாம் நல்விருந்தாக அமையும். நமது முன்னோர்களின் பக்திப் பிரவாகத்திற்கு, இறைபணி நின்ற ஏற்றத் திற்கும், இவைகளில் பல குறிப்புகள் இருக்கின் றதாகக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை சொல்வதுண்டு.

வாழ்க திருக்கோயில்கள் !

வளர்க இறைபணி !!

# திருநாளைப்போவார்

''செந்தமிழ்ச் செம்மல்''

பேராசிரியர் திரு அ. ச. ஞானசம்பந்தம், M.A., சென்னை.

சைவ சமயத்தில் மிகப் பெரிதும் போற்றப்படுகின்ற அறுபத்துமூன்று நாயன்மார்களுள் நந்தனரும் ஒருவர் ஆவார். பெரிய புராணத்தில் வரும் அடியார்களுள் அரிசன குலத்தில் தோன்றியவர் இருவர் ; அவருள் திருஞானசம்பந்தப் பெருமானிடம் யாழ் வாசிக்கும் பணியினை விரும்பி மேற்கொண்டிருந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஒருவர். அவருடைய வரலாற்றை நோக்கும்போது, பாணர் குலத்தில் பிறந்ததற்காக, அவர் என்றுமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அதற்கேற்ப வேதநெறி தழைத்தோங்கத் தோன்றிய ஞானசம்பந்தப் பிள்ளை யாரும் அவரை ஏற்றுக் கொண்டு தம்முடனேயே இருக்குமாறு பணித்தார் என்று வரலாறு பேசிச் செல்கிறது.

அடுத்தபடியாக உள்ள அரிசனத் தொண்டர், நந்தனூர் என வழங்கப்பெறும் திருநாளைப் போவார். சோழ நாட்டில் சிதம்பரத்தை அடுத்துள்ள ஆதனூரில் தோன்றியவர் இப் பெரியவர். இவருடைய வரலாறு நாம் அனைவரும் அறிந்த ஒன்றேயாம். பல தலங்கட்கும் சென்று புறவாயிலில் நின்றபடியே இறைவனைக் கண்டு வழிபட்டுவரும் இவர் ஒருமுறை தில்லை செல்ல விரும்பினர். தில்லைக்குச் சென்ருல் தம் குலம் காரணமாக நடராசப் பெருமானைக் காண முடியாதென்ற கருத்தினுல் நாளைச் செல்லலாம்' நாளைச் செல்லலாம்' என்று கூறிக் கொண்டிருந்து இறுதியாக ஒருநாள் தில்லைக்குச் சென்றே விட்டார். ஆனல், அங்கும் தம் சாதி காரணமாக அம்பலத்துள் செல்ல விரும்பாமல், புறத்தே இருந்த பெருமானை மனத்தால் நினைத்து வணங்கித் தம் பிறப்பைப் பற்றியே நினைந்து வருந்தித் துயிலச் சென்ருர். இறைவன் அவருடைய கனவில் தோன்றி 'இப்பிறவி போய் நீங்க எரியினிடை நீ மூழ்கி' நம்கோயிலினுள் வருக எனப் பணித்து அங்ஙனமே தில்லைவாழ் அந்தணர்கட்கும் நந்தனுக்கு எரி அமைத்துத் தரப் பணித்து மறைந்தார்.

மறுநாள் அவர்கள் அப்படியே அமைத்துத் தரத் திருநாளைப்போவார் அதில் மூழ்கி எழுந்து கோயிலுட் சென்று இறைவனுடன் இரண்டறக் கலந்தார். இதுவே சேக்கிழார் கூறும் 'நாளைப் போவார்' சரித்திரமாகும். பிறந்து, உணர்வு தொடங்கிய காலத்திலிருந்தே இறைவன் மாட்டுப் பெரும் காதல் கொண்டு மறந்தும் அயல் நினைவின்றி இருந்தார் என்று சேக்கிழார் பெருமான்பாடிச் செல்கின்ருர். சிவத்தொண்டைச் செய்ய முற்பட்ட இவர், திருக்கோயில் வழிபாட்டுக்குத் தேவையான பேரிகைத்தோல், வீணை, யாழ் முதலியவற்றுக்குரிய நரம்புகள், கோரோசனை முதலியவற்றைத் தரும் பணியில் ஈடுபட்டிருந்தார். என்ருலும் இவருடைய இளமைப் பருவத்தைப் பேச வந்த சேக்கிழார் பெருமான்

''...............வரு பிறப்பின் வழிவந்த
அறம்புரிகொள் கையராயே அடித்
தொண்டின் நெறிநின்ருர்''

(திருநா-12).

என்று சொல்வது ஆராய்வதற்குரியது. இப் பெரியாருடைய வாழ்க்கையில் பின்னே, தம்முடைய குலப் பிறப்பை நினைந்து வருந்துகின்ற சூழ்நிலை மிகப் பெரிதாக அமையப் போகிறதாகலின், அதனைக் குறிப்பால் உணர்த்த வந்த சேக்கிழார் பெருமான் திருக்கோயிலிலே தம் பிறப்புக்கொத்த முறையில் தொண்டு செய்தார் என்று பேசுகிருர். அடியார்களைப் பற்றிப் பேச வருகின்றபொழுது எவருடைய குலத்தையும் பெரிதாகச் சுட்டிப் பேசுகின்ற வழக்கம் சேக்கிழாருக்கு இல்லை. அப்படியிருந்தும் நந்தனரைப் பற்றிப் பேசும்பொழுது எடுத்த எடுப்பிலேயே தம் குலத்துக்குரிய தொண்டைச் செய்து வந்தார் என்று பேசுவது சற்று வியப்பையே விளைவிக்கின்றது. நன்கு சிந்திக்கும்போது சேக்கிழார் வேண்டுமென்றேதான் இந்த அடியைப் பெய்துள்ளார் என அறிய முடிகிறது.

திருக்கோயிலுக்குரிய பொருள்களைத் தருவதுடன் நில்லாமல் ஆங்காங்கே உள்ள கோயில்களுக்குச் சென்று,

''................திருவாயிற் புறம்நின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினல் ஆடுதலும்
அவ்வியல்பில் பாடுதலு மாய்நிகழ்வார்''

(திருநா-15).

என்கிருர் ஆசிரியர். எனவே ஒவ்வொரு கோயிலுக்கும் சென்று, அதன் புற வாயிலிலே நின்று தம்மை மறந்து பக்தியினல் ஆடுதல் பாடுதல் முதலியவற்றைச் செய்தார் நந்தனர் என அறிகிருேம். திருக்கோயிலுக்குள் நுழை

வதற்குத் தமக்குத் தகுதியில்லை எனக் கருதிய காரணத்தினாலேயே நந்தனார் இவ்வாறு செய்தார் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இங்ஙனம் நடந்து வருகின்ற காலத்தில் ஒரு முறை வைத்தீசுவரன் கோயிலை அடுத்துள்ள திருப்புன்கூர் என்ற ஊருக்குச் சென்று இறைவனை வழிபட விரும்பினார். அங்கே போன பிறகு ஏனைய கோயில்களில் இல்லாத ஒரு சூழ்நிலை அவ்வூரில் இருக்கக் கண்டார். மற்றைய ஊர்களைப் பொறுத்த மட்டில் பெரும் பான்மையான கோயில்களில் வாயிற்புறத்தில் நின்றுகூட உள்ளே உள்ள பெருமானை வணங்க முடியும். மிகப் பெரிய ஆலயங்களில் இவ்வாறு வணங்க முடியாதே தவிரத், தமிழ்நாட்டிலுள்ள ஆலயங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது கோயில்களில் புறத்தே நின்று மூலத் தானத்திலுள்ள பெருமானை வணங்க முடியும். தமிழ்நாட்டுக் கோயில் முறையின் அமைப்பும் அவ்வாறு இருந்தமையின் நந்தனாருக்கு இது எளிதாக முடிந்தது. எனவே உள்ளே சென்று வழிபட வேண்டும் என்ற எண்ணம் ஓரளவு தோன்றியிருப்பினும், அதற்குத் தம்முடைய பிறவி தடையாக இருக்கின்றது என்று நினைத்த காரணத்தால் உள்ளே செல்லாமல் புறத்தே நின்று மூலத்தானத்தை வணங்கிவரும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார்.

திருப்புன்கூர் சென்றபொழுது வழக்கமாக அவர் மேற்கொள்கின்ற வழிபாட்டு முறை தடைப்படலாயிற்று. காரணம் ஏனைய ஊர்களைப்போல் அல்லாமல் திருப்புன்கூரிலுள்ள நந்தியம்பெருமான் மிகப் பெரிய வடிவத்தில் இருந்தார். மூலத்தானத்தில் வாயிலை முற்றிலும் மறைத்துக் கொண்டிருந்த நந்தியம் பெருமானுடைய வடிவம் வாயில் புறத்தில் நின்று உள்ளே காணவேண்டுமென்ற ஆர்வத்தோடு கண்களை ஓட்டிய நந்தனாருக்குப் பெருந் தடையாக அமைந்துவிட்டது. செய்வது அறியாத நந்தனார்,

''திருவாயில் நேரேகும் பிடவேண்டும் என
நினைந்தார்''
(திரு. நா. 15)

இந்நிலையில் இயல்பாக அவர் மேற்கொண்ட வழிபாட்டு முறை முட்டுப்பட்டது. அடியாருக்கு நேர்ந்த முட்டுப்பாட்டை அறிந்த திருப்புன்கூர் மேவிய சிவலோகன் தன்னுடைய எல்லையில்லாத கருணையின் காரணமாக நந்தியம் பெருமானைச் சற்று விலகி இருக்க அருள்புரிந்தான் என்று பெரியபுராணம் பேசுகிறது.

இந்த ஒரு நிகழ்ச்சி நந்தனாருடைய எல்லையற்ற அன்பின் ஆழத்தையும் இறைவனுடைய கருணையின் ஆழத்தையும் காட்டுவதோடு மற்றொரு பேருண்மையையும் காட்டி நிற்கின்றது. இது பற்றிச் சற்று விரிவாகப் பின்னர்க் காண்போம்.

இங்ஙனம் இறைவன் உறையும் பதிகள் பலவும் சென்று வழிபட்டு வந்த நந்தனார் தில்லையம்பலம் சென்று தூக்கிய திருவடி உடையானைத் துதிக்க வேண்டும் என்ற உணர்வுக்கு ஆட்பட்டார். ஆனால், இவ்வுணர்வைத் தடை செய்தது மற்றொரு நினைவு ; அந்நினைவு என்ன என்பதைச் சேக்கிழார் மிக அழகாகப் பாடிச் செல்கிறார்.

''அன்றிரவு கண்துயிலார் ; புலர்ந்ததற்பின்
அங்கெய்த
ஒன்றியணை தருதன்மை உறுகுலத்தோ டிசை
வில்லை
என்று இதுவும் எம்பெருமான் ஏவல் எனப்
போக்கொழிவார்
நன்றுமெழும் காதல்மிக நாளைப்போ வேன்
என்பார்''
(திருநா. 21)

இது வரையில் பல ஊருக்கும் சென்று புறத்தே நின்றுவது இறைவனை வழிபட்டு வந்த நந்தனார் தம்முடைய விருப்பம் தடைப்படுவதற்குரிய காரணம் ஒன்றையும் காணவில்லை. முதன் முதலாக அவருக்குத் தடை ஏற்பட்டது திருப்புன்கூரில்தான். ஆனால் அத் தடையையும் கருணை வள்ளலாகிய பெருமான் நீக்கிவிட்டான். எனவே நந்தனார் சிதம்பரம் செல்லும்போது இத்தகைய தடை ஏதும் ஏற்பட்டால் இறைவன் கருணையினால் அதனையும் போக்கிக்கொள்ளலாம் என்று நினைந்து போயிருக்க வேண்டும். ஒரு வேளை தம்முடைய பிறப்பைப் பற்றிக் கவலை கொள்ளாமல் சிதம்பரம் சென்றிருந்தால் வரலாறு வேறு விதமாக முடிந்திருக்கும்! ஆனால் அத்தகைய ஒரு மனோநிலை அவருக்கு ஏற்படாமல் புதியதோர் எண்ணம் கிளைத்து விட்டது.

''அங்கெய்த ஒன்றியணை தருதன்மை
உறுகுலத்தோ டிசைவில்லை''
(திருநா. 21)

என்று பேசுவது கொஞ்சம் வியப்பை அளிக்கின்றது. இது வரையில் எவ்வாறாயினும் இறைவனை வணங்க வேண்டுமென்ற நினைத்தாரே தவிர, அங்ஙனம் வணங்குவதற்குத் தம்முடைய இந்தப் பிறவி தடை என்ற எண்ணம் இவ்வளவு பெரிதாக அவர் மனத்தில் தோன்றவில்லை. ஆனால், தில்லைக்குச் செல்ல வேண்டுமென்று நினைத்தவுடனேயே ''குலத்தோ டிசைவில்லை'' என்ற எண்ணம் பெரிதாகிவிட்டது. சாதாரணமாக மனத்திலே தோன்றும் பல்வேறு எண்ணங்கள், கவலைகள்போல் இதுவும் ஒன்றாக இருக்கும் என்று நினைப்பது தவறு. ஒவ்வொரு முறை தில்லை செல்ல வேண்டுமென்ற எண்ணம் தோன்றியவுடன், அடுத்து அவருடைய மனத்தில் தோன்றியது தம்முடைய குலம் பற்றிய நினைவு தான். எவ்வளவு ஆழமாக இக்குலம் பற்றிய நந்தனாருடைய மனத்தில் தோய்ந்துவிட்டது என்றால், ''இதுவும் எம்பெருமான் ஏவல் எனப் போக்கொழிவார்'' (திருநா. 21) என்று சேக்கிழார் சொல்லும்போது குலம் பற்றிய வருத்தம் மிக மிக ஆழத்தில் சென்று அவருடைய அக மனத்தையும் பற்றி விட்டதைக் காண்கிறோம். நாள்கள் செல்லச் செல்ல இவ்வண்ணம்

அவருடைய அக மனத்தைப் பற்றி அவரையும் அறியாமல் வெவ்வேறு விதமாகத் தொழிற் படும்படி இயக்கத் தொடங்கிவிட்டது. திருப் புன்கூரில் நந்தியை விலகச் செய்த பெருமான் தில்லையிலும் தமக்கு ஏதாவது ஒரு முறையில் கருணை காட்டுவான் என்ற எண்ணம்கூட அவரு டைய மனத்தில் தோன்றவில்லை. தம்மைப் பற்றி அவர் கொண்டிருந்த சாதி பற்றிய எண்ணம் இவ்வளவு விரைவாகத் தாழ்வு மனப் பான்மையாக அவருக்குப் பதிந்துவிட்டது.

இன இயல்பற்றி அறிந்தோர் இத் தாழ்வு மனப்பான்மை பற்றி நன்கு அறிவர். இந்த நோயால் பீடிக்கப்பட்டவர்க்கு உய்கதியே இல்லை எனலாம். அவர்களாக இத்தகைய ஒன்றுதம்மைப் பிடித்துள்ளதுஎன்பதை அறிந்து நீக்கினுலொழிய இதனைப் போக்கவே முடியாது. தாழ்வு மனப்பான்மையில் சிக்குண்டவர் மிகவும் இரங்கத் தக்கவராவர். பிறர் இதனை எடுத்துக் காட்டி, இத்தகைய மனப்பான்மை தேவை இல்லாத ஒன்று என்று எடுத்துக் கூறினுலும் இம் மனப்பான்மை தம்மிடம் உண்டு என்றுகூட இந் நோயுடையார் ஏற்றுக் கொள்வதில்லை.

அவ்வாருனல் இத்தகைய மனநோய்ப்பட் டார்க்கு மருந்துதான் யாது? மருத்துவன் யாவன்? 'நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்' படுகின்றவனே சிறந்த மருத்துவனுவான். நந்தனுர் போன்ற சிறந்த சிவபக்தர், தவம் பெருக்குஞ் சிலர் ஒருவர் இத்தகைய வேண்டாத நோயால் பீடிக்கப்பட்டால், அதனை இறைவனன்றி வேறு யார் நீக்க முடியும்? பிறர் எடுத்துக் கூறியவிடத்து மன அமைதி அடையக் கூடியவர்களா இவர்கள்? அதிலும் நீக்கக்கூடிய ஒன்றுல் காப்பாற்றப்பட்டதாக நினைத்திருப் பின் ஒரு வேளை வேறு வழிகளில் முயன்றிருக்க லாம். உடம்புடன் பிறந்த நோயாகவே தம் முடைய சாதியை நினைந்துவிட்டார் நந்தனுர்.

சாதி என்ற ஒன்று உண்டா? அது மனிதர் களால் படைக்கப்பட்ட ஒன்றுதானே? அதற் காக இத்துணைத் தூரம் கவலை கொள்வது சரியா என்ற ஆராய்ச்சி பயனற்றதாகும். அந்த நாளையச் சமுதாயம் இதனை உண்மை என நம்பிற்று. அந்தச் சமுதாயத்தில் தோன்றி விட்ட பெரியார் இதனை மெய் என்று முழு மனத்துடன் நம்பிவிட்டார். அந்த நம்பிக்கை சரியா தவரு என்று சிந்திப்பதில் பயனில்லை. சமுதாயத்தின் தவறுதான் என்று கூற வேண் டிய ஒன்றிற்கு அந்த நம்பிக்கையின் அடிப்படை யில் செயற்படுபவரை என்ன செய்ய முடியும்?

நம்பிக்கை யுடையார் இரு வகைப்படுவர். சாதாரண மக்கள் நம்பிக்கை என்பதைப் புளி யம்பழத்தின் ஓடு போலக் கொண்டிருப்பர். முதல் அடி பட்டவுடன் ஓடு பொலபொலவென்று உடைந்து கொட்டிவிடுகிறது. சாதாரண மக்க ளின் நம்பிக்கையும் இத்தகையதே. நம்பிக்கை யின் எதிரான வாதமோ, காரியமோ நடை பெறுவதைக் கண்டவுடன் இவர்கள் நம்பிக்கை யும் ஆட்டங் கண்டு வீழ்ந்து விடுகிறது.

ஆனுல் அடியார்களின் நம்பிக்கை மிகமிக ஆழமானது. இறைவனுலும் அசைக்க முடியாத சிறப்புடையது. அவர்கள் எதிராக இறைவன் நேரே வந்து அவர்கள் கொண்ட நம்பிக்கை தவறுனது என்று எடுத்துக் காட்டினுலும் அவர் கள் தம் நன்னம்பிக்கையை விடுவதில்லை. இதனைப் பிடிவாதம் என்று தவறுதலாகநினைந்து விட வேண்டா. தவறு என்று தெரிந்திருந்தும் வேறு காரணங்கள் பற்றி ஒன்றை விட மறுப் பது பிடிவாதமாகும். ஆனுல், தக்க காரணங் களுடன் தாங்கள் மேற்கொண்ட கொள்கையி லிருந்து பிரிய மறுப்பது மன உறைப்பு என்று கூறப் பெறும். அடியார்கள் கொள்கை என மேற்கொள்வது அனைத்தும் நம்பிக்கையிலிருந்து பிறப்பவையே ஆகும். ஆதலால்தான் அவர்கள் கொண்ட கொள்கையின் மாட்டு அத்துணை உறைப்புடன் நிற்கின்றனர்.

—(தொடரும்)

## சைவசித்தாந்தம்

அறிவிற் கியைந்தது[1] ; காரண காரிய மாம்தருக்க
நெறியினுக் கேற்றது[2] ; உலகளாய்[3] ஓங்கும் நிலையினது[4] ;
நறியவிஞ் ஞான நலத்தது[5] ; செய்கை நயம்மிக்கது[6] ;
செறிதரு[7] முற்போக்குச்[8] செம்மைத்து[9] : சீர்ச்[10]சைவ சித்தாந்தம்மே

1. Rational
2. Logical
3. Universal
4. Perennial, eternal
5. Scientific
6. Practical
7. Comprehensive, inclusive
8. Progressive
9. Liberal and generous
10. Gratifies all kinds of minds and souls.

# தமிழ் இன்பம்

" முத்தமிழ்க் காவலர் "
திரு. கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள்,
திருச்சிராப்பள்ளி

## முன்னுரை :

'தமிழ்' என்று சொல்லக் கேட்டாலே, நமக்கு இன்பம் உண்டாகின்றது. இன்பமும் தமிழும் வேறு வேருனவையல்ல. இன்பமும் தமிழும் ஒன்றினின்று ஒன்று பிரிவற்று விளங்கு பவை. தமிழே இன்பம், இன்பமே தமிழ் என லாம். அத்துணையளவுக்கு இன்பம் தருவதாகத் திகழ்கின்றது தமிழ். அதனல் ''தமிழின்பம்'' பற்றி, இங்கு நாம் ஒரு சிறிதேனும் சிந்தித்து இன்புறுதல் பொருத்தமேயாகும்.

இசைத்தமிழ் வேறு, தமிழிசை வேறு· அதுபோல, இன்பத்தமிழ் வேறு, தமிழ் இன்பம் வேறு. தமிழால் பெறுகின்ற சிறந்த இன்பம் தமிழ் இன்பம் எனலாம். தமிழ்வேறு, இன்பம் வேறு அல்ல. தமிழே இன்பம்; இன்பமே தமிழ் எனக் கூறுதலும் பொருந்தும். ''இன் தமிழ் இயற்கை இன்பம்'' என்று சீவக சிந்தா மணி ஆசிரியராகிய திருத்தக்கதேவர் குறிப் பிட்டு அருளியிருக்கும் தொடர், தமிழ் இன்பத் தின் சிறப்பைத் தகவுற உணர்த்துவதாகும்.

## தமிழின் சிறப்பு :

உலகத்தில் எத்தனையோ பல சமயங்கள் இருக்கின்றன. அவைகளுள் இந்து மதம், சைனமதம், பௌத்தமதம், இசுலாமியமதம், கிறித்துவ மதம் என்பனவே, பெரும்பான்மை யாக விளங்கி வருகின்ற சமயங்களாகும். இவைகள் அனைத்தும் நம் ஆசியாக் கண்டத்தி லேயே தோன்றியனவாகும். வேறு கண்டங் களில் இச்சமயங்களுள் எவையும் தோன்ற வில்லை. எனவே அக்கண்டங்களெல்லாம் வெறும் உப்புக் கண்டங்களும், ஒப்புக்குக் கண்டங்களுமேயாகும் எனலாம். உலகப் பெருஞ் சமயங்கள் அனைத்துமே நம் இந்தியா வில், அதிலும் சிறப்பாக நமது தமிழ்நாட்டில் இருந்து வருகின்றன. உலகில் வேறு எந்த மொழியிலும், இச்சமயங்கள் எல்லாவற்றிற் கும் உரிய இலக்கியங்களைக் காண்பதரிது. நமது தமிழ்மொழி ஒன்றில்மட்டும்தான், சைவம் வைணவம் சாத்தம்சௌரம் காணபத்தியம் கௌமாரம் என்னும் பாகுபாடுகளையுடைய இந்துமதம்—சைனமதம்— பௌத்தமதம் — கிறித்தவமதம்—இசுலாமியமதம் ஆகியவற் றிற்குரிய இலக்கியங்கள் தனித்தனியே உள் ளன. சைவ சமயத்திற்குத் திருத்தக்கதேவர் இயற்றிய சீவக சிந்தாமணியும், பௌத்த சம யத்திற்குச் சீத்தலைச்சாத்தனுர் இயற்றிய மணி மேகலையும், கிறித்துவ மதத்திற்கு வீரமா முனிவர் பாடிய தேம்பாவணியும், கிருஷ்ண பிள்ளை என்பவர் இயற்றிய இரட்சணிய யாத் திரிகமும், இசுலாமிய மதத்திற்கு உமறுப் புலவர் பாடிய சீருப்புராணமும் பிறவும் தமி ழில் சிறந்த தமிழ் இலக்கியங்களாக அமைந் துள்ளன. இங்ஙனம் பல்வேறு சமயங்களுக்கும் உரிய இலக்கியங்களை எல்லாம் ஒரு சேரப்பெற் றிருக்கும் சிறப்பு, நம் தமிழ்மொழி ஒன்றற்கே உரியதாகும்.

## நான்கு பேருண்மைகள் :

இது மட்டுமல்ல, நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் நான்கு சிறந்த பேருண்மைகளைக் கண்டறிந்து, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மிகத் தெளிவாக வலியுறுத்தி அறி வுறுத்தியிருக்கின்றனர். அந்நான்கு சிறந்த உண்மைகளை, வேறு எந்த நாட்டினரும் இவ் வளவு தெளிவாக வலியுறுத்திக் கூறியிருப்ப தாகத் தெரியவில்லை.

1. ஒன்றே குலம்.
2. ஒருவனே தேவன்.
3. யாதும் ஊரே.
4. யாவரும் கேளிர்.

என்று 2,000 ஆண்டுகளுக்கு முன்பே, நம் பண்டைத் தமிழ் முன்னோர்கள் கூறியருளிய உண்மைகள், இன்றும் எவராலும் மறுக்கப் படாத நிலையில் உள்ளன. இந்நான்கு உண்மை களும், எல்லா நாட்டினரும், எல்லா மொழி யினரும் ஏற்று உடன்பட்டுப் போற்றிக்கொண்டு மகிழத்தக்கனவாக விளங்கி வருகின்றன. தமிழ் மக்களின் பேரறிவு, பெருந்தகைமை, பரந்து விரிந்த மனப்பான்மை, சிறந்துயர்ந்த பண்பாடு, நாகரிகம் மிக்க வாழ்க்கை நலன், என்ப வற்றையெல்லாம் விளக்கிக் காட்ட வல்லன வாக, இந் நான்கு பேருண்மைகளும் சிறந்து திகழ்கின்றன. இவற்றை எண்ணும்போது நம் உள்ளமெல்லாம் தமிழ் இன்பத்தில் மூழ்கித் திளைத்துப் பெருமிதம் கொண்டு மகிழ்கின்றது என்பதில் ஐயமில்லை.

## ஐந்திணைப் பகுப்பு :

தமிழன் இயற்கையோடு இயைந்து வாழ்வு நடத்தியவன். தமிழன் உலகின் இயற்கை யமைப்பை ஆராய்ந்து அறிந்து, நிலம் ஐந்து

எனப் பாகுபாடு செய்தான். தமிழன் ஆராய்ந்து பாகுபாடு செய்த குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்னும் ஐந்து நிலங்களுக்கு வேருக, இவற்றில் அடங்காத ஆருவது நிலம் என்ற ஒன்றை, இதுவரையில் எந்நாட்டினரும் கண்டறிந்து கூற முடியவில்லை. நம்முடைய சங்கத்தமிழ் இலக்கியங்களில், குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்னும் ஐந்திணை வளங்களைப் பற்றி விளக்கிப் பாடும் அழகிய இனிய அரிய பாடல்கள் பலப்பல உள்ளன. இத்துணைப் பழமையும் இனிமையும் அருமையும் பெருமையும் மிக்க பாடல்கள், தமிழில் மிகுதியாக அமைந்திருப்பது போல, வேறு எம் மொழியிலும் காண்பது அரிது. இம்முறையில் ஆராய்ந்து சிந்தித்தாலும், நமது உள்ளத்தில் தமிழ் இன்பம் பொங்கித் ததும்பிப் பெருகுதல் திண்ணம்.

## நாற்றிசைக் காற்று :

நமது தமிழ்நாட்டைத் ''தமிழ் கூறும் நல்லுலகம்'' என்று நம் பெரியோர்கள் போற்றிச் சிறப்பித்துப் புகழ்ந்துள்ளனர். சிலநாடுகளில் வெயிலின் வெப்பம் மிகுதியாக இருக்கும் சில நாடுகளில் குளிர் மிகுதியாக இருக்கும். சில நாடுகளில் அடிக்கடி பூகம்பங்கள் ஏற்படும். பிற சில நாடுகளிலோ எரிமலைகளும், பாலை நிலப் பகுதிகளும் இருக்கும். இயற்கை வளங்கள் அமையாத நாடுகள் எத்தனையோ பல உண்டு. நமது தமிழ்நாடு அத்தகைய குறைபாடுகள் ஏதுமின்றி, இயற்கைவளமெல்லாம் இனிது அமையப் பெற்றது. தமிழன் எதையும் துருவி ஆராய்ந்து, கண்டெடுத்துத் தொகைப்படுத்தி, வகைப்படுத்தி, முறைப் படுத்திச் செயற்படுத்துதலில் வல்லவன். காற்றுனது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு ஆகிய நான்கு திசைகளிலும் இருந்து வீசுதலைக் கண்டறிந்து, அவற்றிற்குத் தனித்தனியே பெயரமைத்து வழங்கி வருபவன் தமிழன்! பலநாடுகளின் இயற்கை அமைப்புக்களைக் கூர்ந்து நோக்கி ஆராய்ந்தால், அவற்றில் பலவற்றிற்கு இரண்டொரு திசைகளிலிருந்து மட்டுமே காற்று வீசும் நிலையிலிருக்கக் காணலாம். தமிழகத்தின் அமைப்புத்தான் நான்கு திசைகளிலிருந்தும் காற்று வீசும் வாய்ப்பு வசதிகளைப் பெற்றுள்ளது. எனவேதான் தமிழன் கிழக்குத் திசைக் காற்றுக்குக் கொண்டல் என்றும், மேற்குத் திசைக் காற்றுக்குக் கோடை என்றும் வடக்குத் திசைக் காற்றிற்கு வாடை என்றும், தெற்குத் திசைக் காற்றிற்குத் தென்றல் என்றும், தனித்தனிப் பெயர்கள் அமைத்து, அவற்றின் இயல்புகளையும், ஆங்காங்கே தமிழ் இலக்கியங்களில் விளக்கிப் பாடியிருக்கின்றுன். இதனை எல்லாம் எண்ணி எண்ணி மகிழ்வதும், இலக்கியத் தமிழ் இன்பத் திறனேயாகும்.

## முத்தமிழ் :

வேறு மொழிகளுக்கு இல்லாமல், தமிழ் மொழி ஒன்றற்கேயுரிய சிறப்புக்கள் பலவற்றில், தனிப்பெருஞ் சிறப்பு ஒன்றுண்டு. நம் தமிழ்மொழி ஒன்றில்தான் இயற்றமிழ் இசைத் தமிழ் நாடகத்தமிழ் என முத்தமிழ்கள் அமைந்துள்ளன. வேறு எந்த மொழியும், இத்தகைய அமைப்பைப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. மனிதன் முதலில் ஒன்றை எண்ணு[illegible]. அவ் எண்ணத்தைத் துணிந்து வெளியிடுகின்றுன். பின்னர் அதனைச் செயற்படுத்துகின்றுன். எண்ணம் துணிவு செயல் என்னும் மூன்றும், ஒன்றினை ஒன்று பற்றுக்கோடாகக் கொண்டு தொடர்ந்து நிகழ்கின்றன. மனிதன் மனத்தால் எண்ணுகின்றுன். மொழியால் துணிந்து வெளியிடுகின்றுன், மெய்யால் செயற்படுத்துகின்றுன். இதுவே இயற்கைக்கு இயைந்த இனிய நெறிமுறை. இவ்வடிப்படையிலேயே, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும் தோன்றியுள்ளன. மனத்தினின்று இயற்றமிழும், மொழியினின்று இசைத்தமிழும், மெய்ப்பாட்டினின்று நாடகத்தமிழும் தோன்றியுள்ளன.

## முத்தமிழ்க் காப்பியம் :

இம் முத்தமிழுக்கும் உரிய சிறப்பு இலக்கியமாக நம் தமிழில் சிலப்பதிகாரம் விளங்குகின்றது. அதனுலேயே அதனை 'முத்தமிழ்க் காப்பியம்' என்று நாம் போற்றி வருகின்றேம். தமிழுக்கும் மூன்று என்னும் எண்ணுக்கும் ஏதோ ஒரு பெருந் தொடர்பு இருப்பதாகத் தெரிகின்றது. தமிழ் முத்தமிழாக விளங்குதல் போல, முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தின் அமைப்பும் பெரும்பாலும் மும் மூன்றுகவே அமைந்துள்ளன. சிலப்பதிகாரத்தில் காண்டங்கள் மூன்று.

''அரைசியல் பிழைத்தோர்க்கு
அறம்கூற்று ஆவதும்,
உரைசால் பத்தினிக்கு
உயர்ந்தோர் ஏத்தலும்,
ஊழ்வினை உருத்துவந்து,
ஊட்டும் என்பதும்
சூழ்வினைச் சிலம்பு
காரணம் ஆகச்
சிலப்பதி காரம்
என்னும் பெயரால்
நாட்டுதும் யாம்ஓர்
பாட்டுடைச் செய்யுள்''

எனச் சிலப்பதிகாரத்தால், இளங்கோவடிகள், நமக்கு அறிவுறுத்த முற்பட்ட கருத்துக்களும் மூன்று. அதன்கண்வரும் அரசர்களும், சேரன் சோழன் பாண்டியன் என மூவர் ஆவர். அவர்க்குரிய தலைநகரங்களும் முறையே புகார் மதுரை வஞ்சி என மூன்று. இத்தலைநகர்களின் பெயர்களிலுள்ள எழுத்துக்களும் மூன்று. சிலப் பதிகாரத்தைப் பதிப்பித்தோர் மூவர். திரு. சி. வை. தாமோதரம்பிள்ளை, பேரறிஞர் உ. வே. சாமிநாத ஐயர், பாகனேரி காசிவிசுவநாதன் செட்டியார். சிலப்பதிகார உரையாசிரியர்களும் மூவர்: அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார், நாவலர் நாட்டார்ஐயா. இவ்வாறெல்லாம்கூட எண்ணி எண்ணி மகிழ்தலும் ஒருவகையில் தலைசிறந்த தமிழ் இன்பமாகும்.

(தொடரும்)

# தற்புகழ்ச்சி

'அருள்மொழியரசு'

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

குருக்ஷேத்திரத்திலே, பாண்டவர்கட்கும் கௌரவர்கட்கும் கடும் போர் நடந்துகொண்டிருந்தது; உதிர நதி ஓடியது. பிணமலை குவிந்தது. கழுகும் காகமும் பேயும் நாயும் பிணங்களை யுண்டு பசியாறி மகிழ்ந்தன.

பதினேழாவது நாள் மாலை; அன்று கர்ணனை வதைக்க வேண்டும் என்பது கண்ணபிரானுடைய திட்டம். மாலை நேரம். கர்ணன் உச்சிக் காலத்துச் சூரியனைப்போல் கொதிப்புற்றுப் பாண்டவ சேனைகளை வதைத்துக்கொண்டிருக்கின்றான். தருமபுத்திரர் அவனை எதிர்த்துத் தோல்வியுற்று, உடம்பு புண்ணாகி நொந்து பாசறை சென்று பொறுக்க முடியாத வேதனையுடன் படுக்கையில் சாய்ந்து விட்டனர்.

கண்ணபிரான் செலுத்துகின்ற தேர்மீது அர்ச்சுனன் சென்று கர்ணனைக் கண்டான். அவன் கண்ணுக்குக் கர்ணன் தன் தமையனார் தருமரைப் போல் தெரிந்தது. ''கண்ணா! இது என்ன அதிசயம். இவர் என் தமையனாரல்லவா?'' என்று கேட்டான். கண்ணபிரான், ''அர்ச்சுனா! தருமர் பாசறையில் படுத்திருக்கின்றார்'' என்றார். அண்ணனைக் காணவேண்டும் என்ற அவாவால் அர்ச்சுனன் கண்ணனுடன் பாசறை சென்றான்.

கர்ணன் விடுத்த பாணங்களால் புண்பட்டுத் துன்புற்றிருந்த தருமர், நரநாராயணர்களைக் கண்டார். கர்ணனை வதைத்துவிட்டு வந்திருக்கின்றனர் எனக் கருதினார். ''தம்பி! தனஞ்சயா! கர்ணன் மாண்டனனா? அவன் என்னைப் பாணங்களால் மிகுந்த வேதனைப் படுத்தி விட்டான். அவனை வென்ற உன் வீரமே வீரம்?' என்று வினவினார்.

''அண்ணா இன்னும் கர்ணன் மாளவில்லை. நான் தங்களைக் கண்டு போகலாம் என்று வந்தேன்'' என்றான் அர்ச்சுனன்.

தருமருக்கு உடல்நோய் காரணத்தால் சிறிது சலிப்பு ஏற்பட்டது. ''அர்ச்சுனா! கர்ணனை நானே கொல்லுவேன் என்று பல காலமாக வாய்ப்பறை அறைந்தாய். பகைவனைப் போர்க்களத்திலே வைத்துவிட்டு உனக்குப் பாசறையிலே என்ன வேலை? கர்ணனைக் கொல்லாத உனக்கு இந்தக் காண்டீபம் எதற்கு?'' என்றார்.

அர்ச்சுனன், தன் வில்லைப் பழிப்பவர் தலையைத் தள்ளுவதாகச் சபதம் பூண்டவன். சத்தியத்தை, உயிரினும் விழுமிய நித்தியப் பொருளாகக் கொண்ட தனஞ்சயன், உடனே உடைவாளை உருவினான். தருமருடைய தலையைத் தள்ளுவதற்கு ஓங்கினான்.

கண்ணபிரான் ஓடி, அவன் கையைப் பிடித்தார். ''அர்ச்சுனா! இது என்ன விபரீதம்? தந்தையினும் சாலச் சிறந்த தமையனை வெட்டத் துணிந்தனையே, நில், நில்'' என்றார்.

''கண்ணா! நான் என் தமையனாரைத் தெய்வமாக நினைப்பவன். அவர் என் வணக்கத்துக்குரியவர். அவரை நான் ஒருபோதும் அவமதிக்கமாட்டேன். நான் என் வில்லைப் பழித்தவரைக் கொல்வதாகச் சபதஞ் செய்துளேன். இவர் என் வில்லைப் பழித்தனர். தமையனார் என்று நான் சத்தியத்தை விடக்கூடாது. சத்தியந் தவறியவன் நரகமடைவான். ஆகவே இவரைத் தமையன் என்று கருதிக் கொல்லேனாயின், சத்தியந் தவறிய பாவத்துக்கு ஆளாவேன், அண்ணனைவிடச் சத்தியம் பெரிதல்லவா? இதற்கு நான் என் செய்யக்கடவேன்?'' என்றான் காண்டீபன்.

கண்ணபிரான், ''பார்த்தா! தருமர் என்பது அவர் உடம்பல்லவே. அவருடைய உள்ளம் நோவ, ஏதாவது வைவாயானால் அவரைக் கொன்றதாக ஆகும். உன் சபதமும் நிறைவேறியதாக முடியும். சத்தியந் தவறிய பாவம் உனக்கு வராது'' என்றார்.

உடனே அர்ச்சுனன் வாளைக் கீழே எறிந்தான். தருமர் மனம் நோவ வைதான். எவ்வாறு வைதான். கொடிய வசனங்கள் ஒன்றும் அவன் வாயிலிருந்து வரவில்லை. ஒழுக்கமுடையார் வாக்கிலிருந்து வழுக்கியும் தீச்சொல் வராது அல்லவா?

''அண்ணா! நீ எந்தப் போருக்கு போனாய்? உனக்கு என்ன ஆற்றல் உண்டு?'' என்று இந்த இரண்டே சொற்களைத்தான் சொன்னான். நீங்கள் என்றும், உங்களுக்கு என்றும் பன்மையிற் கூறாமல், நீ உனக்கு என்று ஒருமையில் உரைத்தான். இப்படி உரைத்த மறுகணம் அர்ச்சுனன் உடைவாளை எடுத்து தன் கழுத்தில் வைத்தான். தற்கொலை செய்து கொள்ள முயன்றான்.

கண்ணபிரான் திடுக்குற்றார். இது என்ன? ஒன்றுபோனால் ஒன்று வருகின்றது. ஓடி அர்ச்சுனன் கரத்தைப் பிடித்துத் தடுத்தனர். ''தனஞ்சயா! உன்னை நீயே கொலை செய்து கொள்ள ஏன் துணிந்தனை?'' என்று கேட்டனர்.

வாசுதேவா! என் தமையனார் தருமத்தின் சொரூபம். அவர் எனக்குத் தந்தையினுஞ் சிறந்தவர். அவரை நீ என்று கூறிய இந்தப் புல்லிய நாவுடன் நான் உயிர் வாழ மாட்டேன். பெருமானே! என் கையைவிடு. நான் என்னையே கொலை செய்து கொள்ளப் போகின்றேன். கண்ணா! என் இதயம் வெடித்து விடுகின்றாற் போல் இருக்கின்றது'' என்றான்.

கண்ணபிரான், ''மைத்துனா'' சற்று நில். என் சொல்லை நிதான புத்தியுடன் கேள். அருச்சுனன் என்பது இந்த உடம்பா? இந்த ஊன் உடம்பை உயிர் நீங்கினால் பிணம் என்று அழைப்பர்! எவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளுகிறானோ, அவன் தற்கொலை செய்து கொண்டவனாகின்றான். தற்புகழ்ச்சி, தற்கொலைக்குச் சமானமாகும். ஆகவே உன்னை நீயே சிறிது புகழ்ந்து கொள். அது தற்கொலை புரிந்து கொண்டதாகும்'' என்றார்.

உடனே அர்ச்சுனன் வாளைக் கீழே எறிந்து விட்டு, ''நான் உலகமெல்லாம் வென்றவன்; விஜயன்; பாசுபதாத்திரம் பெற்றவன். காலகேய நிவாத கவசத்தரை கொன்றவன். தேவ ராஜ்ய பட்டாபிஷேகம் பெற்றவன்'' என்று கூறினான். அவ்வாறு கூறி நாணினான். தருமர் திருவடிமீது வீழ்ந்து வணங்கினான். கண்ணீரால் அவருடைய பாதத்தைக் கழுவினான். தருமர் அவனைத் தழுவி ஆறுதல் கூறி ஆசீர்வதித்தார்.

பின்னர் பகவான் தேர்விடத் தனஞ்சயன் போர்க்களம் சென்று கர்ணனைக் கொன்றனன்.

இதனால் பெரியவர்களை ''நீ'' என்றும் ''உன்'' என்றும் ஒருமையில் பேசுவது பிழை என்பதும், தன்னைத் தானே புகழ்வது தற்கொலை போன்றது என்பதும், விளங்குகின்றன.

வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை; நயவற்க
நன்றி பயவா வினை.

---

# மருதமலை முருகன் திருப்புகழ்

—புலவர் திரு. அழகன், பெரம்பலூர்—

மதுரமொழி யுமையரசி மகனே குறக்குமரி
தழுவஅணை மிசைதுயிலும் முருகா சிறப்பிலுயர்
மருதமலை தனில்வளரும் இறையே எனத்துதிகள் பலபாடி

மனமுருகி உனையடையும் வழியே யுரைத்திடவும்
பிறவிஎனும் ஒருபிணியை உடனே யறுத்திடவும்
மயிலின்மிசை துணைவியர்க ளுடனே வரத்தருணம் இதுவாகும்

புதுமையுடன் இசையினிமை மிகவே திருப்புகழை
அருணகிரி தரவதனின் ருசியே புசித்தளவில்
புனிதமுற அவனுயிரை இறவா தமைத்துதவும் எழிலோனே

பொதுவில் நடமிடுகடவுள் அரனாருனைப் பணியப்
பிரணவமு மதன்பொருளும் குருவா யுரைத்தருளிப்
புனமதனில் ஒருபுலவன் தமிழா தரித்திலகும் முருகேசா

உதிரமொடு தசைநிணமு நிலமேனு குத்திடவும்
கழுகினொடு பறவையினம் வெளியே மறைத்திடவும்
உறுமலொலி அழுகுரல்கள் களமே லொலித்திடவும் ஒருநாளில்

உலகமுடி வெனஅமரர் பயமே மிகுத்திடவும்
கரிபரியின் தலைமலைகள் பலவே நிறைத்திடவும்
உறுதியொடு அமர்பொருது கொடு சூரபத்மனது அகமாயை

அதிரவில கிடஉரிய சிவஞான சத்தியெனும்
சுடர்மணிகள் ஒளியுமிழும் வடிவே லெடுத்தகுக
அமரர் தளபதி அரியின்மருகா அறக்கருணை தருவாயே

அறிவிலியென் குறைதவிர்க மகனே பிழைத்துவிடில்
மனமதனில் அரைநொடியும் ஒருதாய் நினைப்பதிலை
அறிகவினி க்ருபைபுரிக நெடியோய் திறற்பெரிய மகதேவா.

# பெருகு சிவபோகம் எனப் பேசும்நெறி

திரு. இராம. கோபாலகிருட்டிணன், எம்.ஏ.,
விரிவுரையாளர், பழநியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரி, பழநி.

## தமிழர் தம் அறக் கோட்பாடு:

'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்பது தமிழர் தம் அறக்கொள்கையாகும். அவரவர்களின் வினைகளுக்கேற்ப, நன்மை தீமை ஆகியவற்றை அனுபவிக்க வேண்டும் என்பது இந்து சமய அறக்கோட்பாடு. மானிட ஆன்மாக்கள் செயல்களில் ஈடுபடும்போது, நன்மையான காரியம் எது, தீமை பயக்கும் காரியம் எது எனத் தீர்மானிக்க அடிப்படை எது என்பதை இறுதியாகத் தீர்மானிக்க இயலவில்லை. ஏனெனில் நடைமுறையில் இருக்கும் நல்லது — கெட்டது; நன்மை — தீமை ; சரியானது — தவறானது; முறையானது — கேடானது ; ஏற்புடையது — மறுக்கக் கூடியது ; செய்யக் கூடியது — விலக்கக் கூடியது என்பனவற்றைப் பற்றித் தெளிவாக அறிந்து செயலாற்ற இயல்வதில்லை. 'நன்றறியேன், தீதறியேன் நானென்று நின்றவனார் என்றறியேன், நான் ஏழை என்னே பராபரமே' எனத் தாயுமானார் கூறும்போது, 'ஏழை' என்பது அறிவில் ஏழை என்பதைக் குறிக்கும். மேலும் ஒருவருக்கு நன்மை பயப்பது மற்றொருவருக்குத் தீமையாகவும், ஒருவருக்குத் துன்பம் பிறர்க்கு இன்பமாகவும் உள்ளது இயற்கை. 'தீதெனவும் நன்றெனவுந் தேர்ந்து நான் சேர்ந்தபடி ஏதும் நடக்கவொட்டா தென்னே பராபரமே' என்று தாயுமானார் கேட்பதிலிருந்து, நமது செயல்கள் செய்யப்படும் முன்னே, நன்மை தீமையை ஆராய வேண்டுமெனத் தெரிகிறது. ஆன்றோர் அனைவரும் நன்மை செய்து தீமையை அகற்ற வேண்டுமென்பர். இது எங்ஙனம் சாத்தியம் ஆகும்?

## திருமுறைகளின் அறக்கொள்கை:

உலகியலில் நடைமுறையில் இருக்கும் அடிப்படை அறக்கொள்கைகள் நன்று, தீது இவற்றின் உண்மை நிலையைப்புலப்படுத்துவது இல்லை. 'தீதவை செய்து தீவினையில் விழாமல் எம்பெருமான் மேல் காதல் செய்து கருத்தினில் நின்று' வழிபடின் தீமை விலகி நன்மை விளையும். ஏனெனில் பிறப்போடிறப்பென்று மில்லாதானாகிய சிவபெருமான் நன்றுடையான், தீயதிலான்; நன்றருளித் தீதகற்றும் நம்பி; நன்று தீதென் றொன்றிலாத நான் மறையோன். தீயவை தீமை பயத்தலால் தீயினும் அஞ்சப்படும் என்பது தமிழ் மறைக் கூற்று. அதனை நீக்கி நன்மையையே விரும்புவதாயின், ஒருவன் இறைவன்பால் மாறாக்காதல் கொள்ளவேண்டும். ஏனெனில்,

> 'கோயிலின் உள்ளே குடிசெய்து வாழ்பவர்
> தாயினும் நல்லவர் தரணி முழுதுக்குங்
> காயினும் நல்லவர் காய்ந்தவர் தம்முளுந்
> தீயினும் தீயர் தீவினை யாளர்க்கே'

என்பர் திருமூலர். எனவே முப்புரம் எரித்த முக்கண்ணன் நல்லவர்க்கு நன்மையும், தீமை புரிவோர்க்குத் தண்டனையும் வழங்குவான் என்பது பெறப்படும். அதனாற்றான், தன்னை ஆண்டு கொண்ட காலத்திலேயே உயிர், உடல், உடைமை அனைத்தும் தனதாக ஏற்றுக்கொண்டபடியால், தற்சமயம் இடையூறு ஏதேனும் உளதோ ; நன்றே செய்தாலும், தீமையைச் செய்தாலும் ஆராய நான் அதிகாரியல்லேன் என்று மாணிக்கவாசகர் தெளிவுபடுத்துகின்றார். 'குன்றே அனைய குற்றங்கள் குணமா மென்றே நீ கொண்டால் என்தான் கெட்டது?' என அவரே வினவுகின்றார். பொன்னும் மெய்ப்பொருளுந் தந்து போகமும் திருவும் புணர்ப்பானாகிய சிவன் பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெல்லாந் தவிரப் பணிப்பானை' என்று ஆரூர்ப் பெருமானைச் சுந்தரர் ஏற்றிப் போற்றுகின்றார்.

> பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
> பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே'

என்று தனித் திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமான் பாடுகின்றார்.

## அடியார்கள் அறத்தைக் கடைப்பிடித்த விதம் :

நன்றே வரினும் தீதே விளைகினும் மாதொரு பாகனாரை விட மற்றொரு துணையினை மறுமைக்கும் காணேன் என்ற நிலையில், அடியார்கள் ஆண்டவன்பால் மனம் மொழி மெய் இவற்றால் தூய அன்பு செலுத்துவர். அடியார்கள் குற்றமே செய்திருப்பினும், அவற்றைக் குணமாகக் கொண்டருளுவது எமையாளும் ஈசன் செயல் என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருப்பர். 'குற்றம்நீ குணங்கள்நீ கூடலாலவாயிலாய்' என்று சம்பந்தரும், 'குற்றங் குறையக் குணமேலிட அருளை உற்றவரே ஆவிக் குறவாம் பராபரமே' என்று தாயுமானாரும், குற்றமே செயினும் குணமெனக் கொள்ளும் கொள்கையால், மிகைபல செய்தேன்' என்று சுந்தரரும் பாடியருளியுள்ளனர். இவண், 'மிகைபல செய்தேன்' என்பது விரும்பத் தகாத செயல்களைச் செய்தலாகும். சாதாரண மக்கள் தவறிழைப்பின் தண்டிக்கப்படுகின்றனர். ஆனால் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்கள் செய்யும் தவறுகளை எங்ஙனம் எம்பெருமான் குணமெனக் கொண்டு அருள்புரிவான்? செய்யும் செயலைவிடச் செய்யப்படும் நோக்கம்தான் முக்கியம். 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன், நினையா தொரு பொழுதும் இருந்தறியேன்' என்று எப்பொழுதும் சிவசிந்தனையாகவே இருந்து செயலாற்றின், தீமையும் நன்மையாக முடியும் என்பதுதான் அடியார்கள் வாழ்வும் வரலாறும் காட்டும் உண்மை.

**எறிபத்தர் :**

உண்ணிறை காதலோடு ஒழுகும் சிவகாமி யாண்டார் ஆலந்தான் உகந்து அமுதுசெய்வான் ஆலயத்திற்குத் திருப்பள்ளித் தாமம் கொண்டு செல்லுங்கால், மதம் பிடித்த வேழம் ஒன்று அதனைப் பறித்துக் கீழே போட்டு மிதித்தது. ('மன்றவர் அடியார்க் கென்றும் வழிப்பகை களிறேயன்றோ'). சிவகாமியாண்டார் செய்வ தறியாது திகைத்துச் 'சிவதா' என அலறிய போது எறிபத்த நாயனுர் அன்பர்க்கடாதன அடுத்தபோது முழையரி என்னத் தோன்றித் தூய பரசுகொண்டு சினக் களிற்றையும், அதனை அடக்காது வாளாவிருந்து சிவநிந்தனைக்காளான பாகர்களையும் வெட்டி வீழ்த்தினர். இச்செயல் பாதகமாக இருப்பினும், இறுதியில் ஆளுடைத் தொண்டர் செய்த ஆண்மை வென்று நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கயிலை வெற்பிற் கொற்றவர் கணத்தின் முன்னும் கோமுதல் தலைமை பெற்றுர்.

**கோட்புலியார் :**

போர் விளைத்துப் புகழ் விளைக்கும் கோட் புலி நாயனுர் சிவனுக்கென வைத்திருந்த திருப் படி நெல்லை எடுத்து உணவாக்கி உண்டு களித்து இருந்த சுற்றத்தினர் அனைவரையும் உற்றுர் பெற்றேரையும், குடிக்கொரு புதல்வனையும் சித்தவாள் கொண்டு துணித்தார். இக்கொலைச் செயலால் கைவாளால் உறுபாசம் அறுத்து இறைவனுடன் இரண்டறக் கலக்கும் பேறு பெற்றுர்.

**இடங்கழியார்:**

மைவளருந் திருமிடற்றுர் மன்னிய கோயில்கள் தொறும் மெய்வழிபாட்டு அருச் சனை முடங்காமல் நடைபெற இடங்கழி நாய ஞர் தாம் செய்யும் வினை தெரியாது பெரு விருப்பால் அரசரவர் பண்டாரத்தின் நெற் கூட்டினைக் கவர்ந்து சென்று வழிபட்டார். அரசர் நிலைமையை அறிந்து 'இவரன்றே ? மூலபண்டாரம் எனக்கு' என மன்னித்தருளி ஞர். இறைவனது இன்னருளையும் தன் செய லால் களவு கொண்டார் இந்நாயனுர்.

**திருநீலகண்டர்:**

வையகம் போற்றும் செய்கையில் மனை யறம் புரிந்து வாழ்ந்த திருநீலகண்ட நாயனுர், இளமை மீதூர இன்பத் துறையில் எளியர் ஆனுர். இத்தவறினுல் மனைவியின் வசவு பெற் றுப் பரிகாரமாக எப்பெண்டிரையும் ஏறெடுத் துப்பாராமல் இளமை நீங்கப் பெற்று, முதுமைக் காலத்தில் சிவபெருமானுல் ''வென்ற ஐம்புல ஞல் மிக்கீர் விருப்புடன் இருக்க நம்பால் என்றும் இவ்விளமை நீங்காது'' என்று அருளப் பெறும் பேறு பெற்றுர்.

**கற்று நற் சூதர்:**

'ஆதி முதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்' என்று உணர்ந்து நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட நிலைமையார் மூர்க்க நாயனுர். எம்பெருமான் அடியார்க்கு அமுத ளிக்கப் பொருள் கிடைக்காமையால் சூதினில் வென்று பொருள் பெற்றுத் தாம் கொள்ளாமல், காதலுடன் அடியார்கள் அமுது செய்து கடைப் பந்தி ஏதமிலா வகை தாமும் அமுது செய்து இறைவனுடன் இருக்கப் பெற்றுர்.

**நந்தனுர்:**

பூளைப் பூவாம் பிறவிப் பிணிப்பொழிய, ஊர்ப் புலைமை ஆன்ற தொழில் தாயத்தவ ராகிய நந்தனுர் மறந்தும் அயல்நினைவின்றி, தில்லைக்குச் சென்று 'இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங்கூத்தினைக் கண்டு வணங்க விழைந்தார். அங்கு அந்தண ரின் தீ வளர்த்து வேள்வியில் வரும் புகையைக் கண்டு, 'அல்குந்தம் குலநினைந்தே அஞ்சி நினைந் திலர் நின்றுர்'. இறுதியில் நடராசப் பெருமான் ஆணையால் எரியிடை மூழ்கி முப்புரிநூல் மார்ப ராக மாறி, ஆசில் மறை முனியாகி அம்பலவர் தாளடைந்தார்.

**சுந்தரர்:**

மேரு வரையில் மேம்பட்ட தவத்தால், சாலச் சிவன்பால் அன்புகொண்ட சுந்தரமூர்த்தி நாயனுர், திருவொற்றியூரில் சங்கிலி நாச்சியா ரால் சங்கிலித் தொடக்குண்டார். அவரை மணம் புரியுங்காலை மகிழ மரத்தின் கீழ் நின்று, நின்னைப் பிரியேன் என்று வாக்களித்தார். ஆயினும் அந்தியும் நண்பகலும் ஆரூர்ப் பெரு மானையும் வசந்த விழாவையும், பரவையார் பாடல் ஆடல்களைக் கண்ணுற வேண்டுமென்ற காதலால் வாக்கை மீறி ஒற்றியூரினின்றும் நீங்கி, இருகண்களிலும் ஒளியிழந்து திருவெண் பாக்கத்தில் பதிகம் பாடி, ஊன்றுகோல் பெற்று ஆலந்தான் உகந்தவன் அமரும் கச்சி ஏகம்பத் தில் ஒரு கண்ணும், திருவாரூரில் மறு கண்ணும் பெற்று மகிழ்ந்தார்.

**சிவபோகம் :**

இவ்வாறு, தீமைகள் புரியினும் அவை இறைவனுக்காக, இறைவன் தொண்டருக்காக, இறையன்புடன் செய்யப்பட்டவையாக இருப் பின், நன்மையே விளையும் என்ற கருத்துக்களை 'உண்மை நெறி விளக்கம்' என்ற மெய்கண்ட சாத்திர நூல் சிவபோகம் எனப் பேசும் நெறி யாகக் கூறுகிறது.

பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி
வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
தனக்கெனஓர் செயலற்றுத் தான்அதுவாய்
நிற்கில்
நாதன்இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையுந் தானுகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே.

# கடியன் கொடியன் நெடியமால்

கடியன், கொடியன், நெடியமால்,
உலகம் கொண்ட
அடியன், அறிவரும் மேனி
மாயத்தன், ஆகிலும்
கொடிய என்நெஞ்சம் அவன்என்றே
கிடக்கும் ; எல்லே !
துடிகொள் இடைமடத் தோழீ !
அன்னை என் செய்யுமே ?

—நம்மாழ்வார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் என்னும் வைணவப் பெருஞ் சான்ருேர் இயற்றியருளிய ஆசாரிய இருதயம் என்னும் அரும் பெரும் நூல், நம்மாழ்வார் பாடியருளிய பாசுரங்களைக் குறித்து ''ஞானத்தில் தன்பேச்சு, பிரேமத்தில் பெண் பேச்சு'' என்று ஆராய்ந்து உணர்ந்து அழகுறக் கூறுவதுபோல, நம்மாழ்வார் தம்முடைய பிரேமம் மேலிட்ட நிலையில், பெருமாளின் மீது அளவற்ற காதல் கொண்டு, நாயக-நாயகி உணர்வு (Bridal Mysticism) நிலையில், இத்திருப்பாடலை அருளிச் செய்கின்ருர்.

### பாடலின் கருத்து :

பராங்குச நாயகி என்னும் நம்மாழ்வார் ஆகிய தலைவி, எம்பெருமான் ஆகிய தலைவனைப் பிரிந்து வருந்துதலைக் கண்ட தோழியானவள், தலைவியின் பிரிவாற்ருமைத் துயரத்தைத் தணிப்பதற்கு விரும்பி, நற்குணங்கள் எதுவும் இல்லாதவன் என்று தலைவனை இயற்பழித்துப் பேசுகின்ருள். அது கேட்ட பராங்குச நாயகி, ''தோழி! எம்பெருமான் நிறைகுணன் அல்லனுய், நீ சொல்லுதற்கு ஏற்ப இழிகுணத்தனுய் இருப்பினும், என் நெஞ்சம் அவனையல்லது எதனையும் அறியாது. என்னைப் பிரிவுத் துயர் தணிவித்து ஆற்றுவித்தற் பொருட்டாக, எம்பெருமானை நீ இழிகுணன் என்கின்ருய்!

எம்பெருமான் நிறைகுணன் என்பதற்காக, யான் அவனைக் காதலிக்கவில்லை. ''கடியன்—கொடியன் — நெடியமால் — உலகம் கொண்ட அடியன்—அறிவரும் மேனி மாயத்தன்'' என்றெல்லாம், இழித்தும் பழித்தும் பேசத் தக்க நிலையில், எம்பெருமான் இழிகுணனுக இருக்கின்ருன் என்றே வைத்துக் கொள்வோம். அது பற்றி அவன்பால் என் அன்பு சிறிதும் குறைவுருது. அதற்கு மாருக, அதன் காரணமாகவே, அவனை யான் பெரிதும் விரும்பி மேல் விழுந்து காதலித்து நிற்கின்றேன். ஆதலின் நின் கூற்றுக்களுக்குப் பயன் ஏதும் இல்லை காண் என்று, தலைவி தோழியை நோக்கிக் கூறுவதாக, இத்திருப்பாடல் அமைந்திருக்கின்றது. இதன் சொற் பொருட் சுவை நலங்களை, இங்கு இயன்ற வரை ஆராய்ந்து இன்புறுவோம்.

### தோழிக்குத் தலைவி கூறுதல் :

எம்பெருமான் இழிகுணன் என்று சொல்ல வேண்டுமாயினும், என்னுடைய ஆருயிர்க் காதலன் ஆகிய அவனைப் பற்றி, யான் குறைகூற வேண்டுமேயன்றி, என்னுடைய குற்றேவலள் ஆகிய நீ குறைகூறுதல் தகாது. எனக்கும் அவனுக்கும் இடை நின்று, எம் இருவரையும் இணைத்துப் பிணைத்து வைத்த அவ்வளவில், நின் பணி அமைந்தது. அவனுடன் ஒன்றிக் கலந்து புணர்ந்து பழகியவள் நானே யல்லது நீயல்லை. ஆதலின் அவனிடத்துள்ளது நன்மையோ தீமையோ எதுவாளுலும், அஃது எனக்குத் தெரியுமேயன்றி, நினக்குத் தெரிய நியாயம் இல்லை. ஆதலால் அவனது இழிகுணங்களையும், என் வாயால் யான் சொல்ல நீ கேளாய்! என்று, முன்னுரை கூறிக்கொண்டு, பராங்குச நாயகி எம்பெருமானின் இழிகுணங்களைச் சொல்லத் தொடங்குகின்ருள்.

**(1) கடியன் :** தன் காரியம் ஆயின், அதனை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக, அதில் மிக மிக விரைவும் ஆர்வமும் காட்டுபவன். தனக்கு ஒரு காரியம் உள்ளதாயின், அதனை எவ்வாற்ருலேனும் முடித்துக் கொள்ளும்பொருட்டு, தானே வலிய வலிய வந்து மேல் விழுந்து பதறிச் சடக்கெனக் கலந்து கொள்பவன்.

**(2) கொடியன்:** தன் நலம் ஒன்றே கருதுபவனே யன்றித் தன்னுல் பிறர்க்கு நேரும் துயரங்கள் எதனையும், ஒரு சிறிதும் கருதிப் பாராதவன் : பிரிய இயலாதவரைப் பிரிந்து

சென்று தன் பிரிவால் அவர்களுக்குக் கொடுமைகள் செய்யும் இயல்பினன்.

**(3) நெடியமால் :** மிகவும் பெரியவன்; அணியனுய்க் கைபுகுந்திருக்கும் பொழுதும், அளவிட்டு அறிய ஒண்ணுதபடி மிகப் பெரியவனுய் இருந்து மயக்குபவன். அதாவது, தானே வலிந்து வந்து மேல் விழுந்து கலந்திருக்கும்போதும், பிரிந்து விட வேண்டுமென்று உள்ளத்துக்குள் நினைத்து முயலுபவன். அங்ஙனம் அவன் நினைந்து முயலுவதை உணர்ந்து, பிரியலாகாது என்று மடிபிடித்துக் கால்கட்டிப் பணிந்து வணங்கி விலக்கப் பார்க்கலாமாயினும், அது செய்வதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்க வேண்டும்படி, திடீரென்று பரத்துவம் பாராட்டி நிற்பவன்.

**(4) உலகம் கொண்ட அடியன் :** பிறர் பொருளைக் கவர்ந்து தனக்காக்கிக் கொள்ள நினைத்து விட்டால், பின்னர் அவர்களுக்கு அதில் ஒரு சிறிது பகுதியையும் விட்டு வைக்காமல், முற்ற முடியவும் தனக்கே யாகப் பற்றிக் கவர்ந்து கொண்டு, அவர்களைத் தன் காலால் மிதித்துப் பாதலத்தில் அடியோடு தள்ளிவிடுபவன்.

**(5) அறிவரும் மேனி மாயத்தன்:** தனது திருவுருவத்தை நோக்கினுல், தன்னுடையவைகள் எல்லாவற்றையுமே பிறர்களுக்கு வாரி வழங்க இருக்கின்ருனே? அல்லது பிறருடைய பொருள்கள் எல்லாவற்றையும் தானே பறித்துக் கவர்ந்து எடுத்துக் கொள்ள இருக்கின்ருனே? என்று தெரிந்து கொள்ள முடியாதபடி, வியந்து திகைப்புற்றுக் கலங்கும்படி செய்யத் தக்க, மாயச் செயல்களை உடையவன்!

**(6) ஆகிலும்:** இத்தகைய இவனது குணக்கேடுகளைக் கோடிக் கணக்கில் எடுத்துக் கூற வேண்டுமாயினும், அவற்றை நானன்ரே கூறக் கடவன்? தோழீ! இவைகளையெல்லாம் உன்னுல் அறியவும் சொல்லவும் இயலுமோ? இவையிற்றை யெல்லாம் உலகவர் முன் எடுத்துப் பேசி இகழ்ந்து பழிப்பதற்கென்றே இட்டுப் பிறந்த, சிசுபாலன் முதலியவர்களாலும் கூட இயலாதே?

**(7) கொடிய என் நெஞ்சம் :** இவ்வளவு குணக்கேடுகளையும் அறிந்து வைத்தேயுமன்ரே, யான் எம்பெருமான் திறத்தில் என்நெஞ்சம் பறி கொடுத்து, ஈடுபட்டுச் செயலற்றுக் கிடப்பது! உலகியல்பின் நெறிக்கு மாறுபட்டு அன்ரே, என்னுடைய நெஞ்சம் இவ்வகையிற் கொடியதாக அமைந்து காணப்படுகின்றது. குண நிறைவு கண்டு விரும்பிப் பற்றுவதும், குண இழிவு அறிந்து வெறுத்துக் கைவிட்டொழிவதுமே, நாட்டு மக்களின் நல்லியல்பாக விளங்குகின்றது. ஆனுல் அந்தோ, என் நெஞ்சமோ கொடியதாய்க் குணக்கேடும் இழிவும் கண்டு உணர்ந்து வைத்தும், மகிழ்ந்து ஈடுபட்டன்ரே, எம்பெருமானை விடமாட்டாமல் இறுகப் பற்றிக் கொண்டு நின்று, காதலித்து மையலுற்று மயங்கிக் கிடக்கின்றது!

**(8) இவன் என்ரே கிடக்கும் :** ஒருவர்பால் குற்றம் கண்ட இடத்து, அவரை வெறுத்து விடுத்தொழிப்பதே உலகவர் இயல்பு. ஆனுல் எத்துணைதான் குற்றங்களை யெல்லாம் எடுத்துத் தொடுத்துக் கூறினும், எம்பெருமான் திறத்தில் சிறிதும் வெறுப்புக் கொள்ள மாட்டாமல், அக் குற்றங்களுக்காகவே என்னுடைய நெஞ்சம் மேன்மேலும் அவன் மேல் விருப்பம் கொண்டு, காதல் வெள்ளம் பெருகி மையலுற்று, ஆழ்ந்து மயங்கிக் கிடக்கின்றது. உண்மைக் காதலானது, குண நிறைவையோ, குண இழிவையோ, ஒரு சிறிதும் உற்று நோக்கி உன்னி ஆராய்வதில்லை. உண்மைக் காதலுணர்விற்குக் குணக் குறைவும் கூட, குண நிறைவாகவே தோன்றி, மகிழ்ச்சியூட்டும். குணம் கருதியுணர்ந்து செய்யும் அன்புப் பணியினும், குணத்தின் குறைநிறைகள் நோக்காது செய்யும் உண்மையன்பின் அடிமைத் திறமே, மிக மிக மேலானது.

## முடிவுரை :

இங்ஙனம் ஒவ்வொரு சொல்லும் சொற்ருெடரும், மொழிக்கு மொழி மிகமிகத் தித்திப்பாக, அமைந்திருக்கும் திருப்பாடல்கள் பலவற்றை, நாம் நமது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் காணலாம். திவ்வியப் பிரபந்தப்பாடலின் சிறப்பும், அவற்றிற்குப் பெரியவாச்சான் பிள்ளை போன்ற சிறந்த அறிஞர் பெருமக்கள் எழுதியுள்ள அழகிய நுண்ணிய விரிவுரைகளும், அறிஞர்களுக்கு ஆராப் பெருவிருந்தாகும். அவற்றின் சொற்பொருட்சுவை நலன்களை ஆராய்ந்து இன்புற்றுத் திளைப்பவர்கள், ''இச்சுவை தவிர யாம் போய், இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டோம்'' என்னும் நிலையில், எல்லையில்லாப் பேரின்ப அனுபவத்தை எய்தி நிற்பார்கள். அத்துணைச் சிறப்பு மிக்க, தெய்விகக் கவிதைப் பேரின்ப அனுபவத்தின் பெற்றியினைத், திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களை இடையருது பயின்று ஓதுவதன் வாயிலாக, நாம் எய்தி இன்புற்று, உய்தி அடைய முயலுவோமாக!

—ஆசிரியர்.

—: 0 :—

# பாரதநூற் பண்போவியங்கள்

## 2. பீஷ்மர்


திரு. கவிஞர்
மனசை ப. கீரன்,
B.A., B.T.


பரதனின் வழி வந்தவன் பிரதீபன். அவனுக்குப் பல ஆண்டுகளாகக் குழந்தை பிறக்கவில்லை. அதனால் அவன் கங்கைக் கரையில் அமர்ந்து தவம் செய்தான். ஒரு நாள் மாலை நேரம். ஓர் அழகிய இளம் பெண் பிரதீபனின் மடியில் வந்து அமர்ந்தாள். ''மன்னவா! நான் உன்னை விரும்புகிறேன். என்னை நீ மணந்து கொள்'' என்றாள். ''நான் நற்குடியில் பிறந்தவன். உன்னை மணக்க மாட்டேன்'' என்றான் மன்னவன். ''வேந்தனே, நான் கன்னி. தூயவள். அண்டி வந்தவளை அகற்றாதே! என் மூலம் உனக்குப் பிள்ளை உண்டாகும். மணந்து கொள்! என்று வேண்டினாள் அந்த அழகி. ''பெண்ணே! நீ தவறு செய்துவிட்டாய். என் உடலில் வலது பக்கம் மகனுக்கும், இடதுபக்கம் மனைவிக்கும் சொந்தம். நீ வலத் தொடையில் அமர்ந்தாய். அதனால் நீ என் மருமகளாகி விட்டாய். இனி உன்னை மனைவியாக நினைப்பதும் பாபம்!'' என்று விளக்கினான் பிரதீபன்.

உடனே அவள் சிரித்துக் கொண்டே எழுந்தாள். கங்கா தேவியாகக் காட்சி தந்தாள். ''பிரதீபா! நீ கங்கையாகிய என் மடியில் அமர்ந்து கடும் தவம் செய்தாய். உன்னைச் சோதிக்கவே இப்போது பெண்ணாக வந்தேன். உன் உறுதியையும் ஒழுக்கத்தையும் பாராட்டுகிறேன். நீ விரும்பியபடியே நான் உன் மருமகளாக வருவேன். அதற்குக் காட்டில் நான் உன் மகனைச் சந்திப்பேன். அவன் என்னை யார்? எப்படிப்பட்டவள்? என்று விசாரிக்காமல் ஏற்றுக்கொள்ளச் சொல். உன் குலம் நீடூழி வாழ்க'' என்று வாழ்த்தி மறைந்தாள் கங்கை.

பிரதீபன் நாட்டுக்கு வந்தான். அத்தினபுரத்தில் ஆண்டு வந்த காலத்தில் அவனுக்குத் தேவாபி, சந்தனு, பாகுவீகன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். மூத்தவன் தேவாபி இளமையிலேயே துறவு பூண்டான். அடுத்தவன் சந்தனு அரசு புரிந்தான். 'சம்-தனு' என்றால் 'சுக சரீரம்' என்று பொருள். சந்தனு மூப்புற்றவர்கள், நோயாளிகள் ஆகியோரைத் தொட்டபோது அவர்கள் குணமானார்கள். பிரதீபனிடம் கங்கை சொன்னபடியே சந்தனு காட்டில் அழகி ஒருத்தியைச் சந்தித்தான். அவன் அவளை மணக்க விரும்பியபோது, 'நான் பெறும் பிள்ளைகளை என் விருப்பப்படி செய்வேன். ஏன்? என்று கேட்கக் கூடாது'' என்றாள்.

சந்தனுவும் சம்மதித்துக் கங்கையை அழைத்து வந்து திருமணம் செய்து கொண்டான். கங்கைக்குக் குழந்தை பிறந்ததும் அவள் அதைக் கங்கை ஆற்றில் வீசி எறிந்தாள். இப்படி அடுத்தடுத்து ஏழு குழந்தைகளைக் கங்கையில் போட்டாள்.

எட்டாவது குழந்தை பிறந்தபோது சந்தனு தடுத்தான். கங்கையை ''ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டான்.

''எட்டு பேரும் வசுக்கள். கடைசி வசு பிரபாசன். அவன் முற்பிறவியில் வசிட்டரின் ஆசிரமத்திலிருந்து காமதேனுவின் பாலை மனைவிக்குத் தந்தபோது அவள் இளமையை அடைந்தாள். அவளோ பூவுலகிலுள்ள தோழிக்கும் சிறிது பால் கேட்டாள். பிரபாசன் பிற ஏழு வசுக்களுடன் காமதேனுவின் பாலைத் திருடப் போனான். கோபமுற்ற வசிட்டர் எண்மரையும் மனிதர்களாகப் பிறக்கச் சாபமிட்டார். அதன் விளைவே இது. திருடப் போன எழுவரும் மனிதரானது சாபம். பாபத்திலிருந்து விடுவித்து உடனுக்குடனே மேல் உலகம் அனுப்பினேன். கடைசிப் பிள்ளையான இக் காங்கேயன் முன்பு மனைவியின் சொல் கேட்டதால் பெண் இன்பமின்றிப் பல்லாண்டு காலம் மண்ணுலகில் இருப்பான். அவனை உரிய காலத்தில் உன்னிடம் சேர்க்கிறேன்'' என்று கூறிக் கங்கை மறைந்தாள்.

காங்கேயன் பரசுராமரிடம் வில் வித்தையையும், சகல கலைகளையும் வசிட்டரிடமும் பெற்றான். பிறகு கங்கை காங்கேயனைச் சந்தனுவிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றாள். காங்கேயனைச் சந்தனு அத்தினபுரம் கொண்டு வந்து இளவரசன் ஆக்கினான். காங்கேயன் மக்கள் நலனுக்காகப் பாடுபட்டான்.

சந்தனு ஒரு நாள் வேட்டையாடப் போனான். காட்டில் சிறந்த நறுமணம் வீசியது. அந்தத் திசையில் சந்தனு சென்றான். அங்கே மிக அழகிய பரிமளகந்தி இருந்தாள். அவள் தாசராஜன் என்ற செம்படவ மன்னனின் மகள் என்பதை அறிந்தான். அவளைச் சந்தனு மணக்க விரும்பியபோது, ''மூத்த காங்கேயன் இருக்க நீ மணந்தால், பரிமளகந்தியின் பிள்ளைகள் முடிசூட முடியாதே'' என்று தாசராஜன் கூறினான்.

காங்கேயன் முடிசூடாமல் போவது பற்றி எண்ணவே சந்தனுவால் முடியவில்லை. ஆனால் நாடு வந்ததும் பரிமளகந்தியை நினைத்து நோயுற்று இளைத்தான். காங்கேயன் பலரையும் கேட்டு உண்மை அறிந்து, அரச குடும்பத்தினர், புரோகிதர்கள், அமைச்சர்கள், புடைசூழ ஆடை, அணிகலங்களுடன் தாசராஜனை அடைந்தான். அவனை மிகப் பணிந்து, ''இன்று முதல் நீ என் பாட்டன். உன் மகள் பரிமளகந்தி என் சிற்றன்னை. அவளுக்குப் பிறக்கும் தம்பிகளே அரசாள்வர். எனக்கு இவ்வுலக வாழ்வும் மேலுலக வாழ்வும் இல்லாமற் போனாலும் பரவாயில்லை. நான் யாரையும் மணக்க மாட்டேன்'' எனச் சபதம் செய்தான்.

அப்போது ''பீஷ்ம'' என்ற குரல் ஒலித்தது. ''கடுமையான விரதம் ஏற்றவன்'' என்பது இதன் பொருள். வானம் மலர்களைச் சொரிந்தது. அது முதல் காங்கேயனுக்குப் 'பீஷ்மர்' என்ற பெயர் ஏற்பட்டது.

எல்லாம் கேட்ட சந்தனு ''நான் உனக்கு மணம் செய்ய வேண்டும். நீ எனக்குச் செய்தாய். இனிப் பஞ்சணை எனக்கு, உனக்கு மான் தோல் படுக்கையா? உன்னைப் போல் தந்தைக்காகத் தியாகம் செய்தவர் யாருமில்லை'' என்றான். பிறகு பரிமளகந்திக்குப் பிறந்த சித்திராங்கதன், அவன் தம்பி விசித்திரவீரியன் ஆகியோருக்குத் துணையாக இருந்து அரசுப் பணிகளைச் செய்தார் பீஷ்மர். அவரை வெல்ல யாராலும் முடியவில்லை. தான் கற்ற கலைகளைத் தம்பிகட்குக் கற்றுத் தந்தார். அந்தப் பரம்பரையிலேயே சிறந்த ஒருவராக விளங்கினார் பீஷ்மர்.*

# வயலூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி

[தமிழ்த் தாத்தா—தாட்சிணாத்ய கலாநிதி—மகாமகோபாத்தியாய திரு டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள், தமிழுக்குப் புத்துயிர் அளிக்கத் தமிழ் நாடெங்கணும் அலைந்து, சுற்றுப் பயணம் செய்து, தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் ஏடுகளைத் தேடித் தொகுத்தார்கள். அரும் பாடுபட்டு அவர்கள் தொகுத்த நூல்கள் யாவும், அவர்கள் பெயரால் திருவான்மியூரில் விளங்கும் நூல் நிலையத்தில் உள்ளன. அவற்றில் டாக்டர் ஐயரவர்கள், வெளியிட்டுள்ள நூல்களும், பிறரால் வெளியிடப்பெற்ற நூல்களும் தவிர, இது வரை வெளிவராத நூல்கள் பலவும் உள்ளன. அவைகளை வகைப் படுத்தி ஏட்டுச் சுவடிகளுக்கும், கையெழுத்துப் பிரதிகளுக்கும் சேர்த்து, சுவடிகளின் பெயர் முதலிய விவரங்கள் அமைந்த விளக்க நூல்கள், ஆறு (6) தொகுதிகளாக, டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல்நிலையத்தினரால் வெளியிடப் பெற்றுள்ளன.

இந்த நூற் பெருங்குவியலின்கண் உள்ள பல்வேறு நூல்களையும், பொதுமக்கள் நலங்கருதி, மேற்படி நூல்நிலையத்தினரே அவ்வப்போது பதிப்பித்து வெளியிட்டு வருகின்றனர். எனினும், நூல் நிலையத்தின் நிதி வசதிக் குறைவையும், நூல்கள் வெளியிடுவதில் ஏற்படும் காலதாமதத்தையும், இங்குள்ள பழைய ஏடுகளின் தன்மையையும் கருதும்போது, நூல் நிலையத்தினரே அத்தனை நூல்களையும் வெளியிடுவதோ, அது வரையில் நூல்களை அழியாமற் பாதுகாப்பதோ இயலாது என்பதால், வேறு பிற வழிகளிலும் நூல்களை வெளியிட விரும்பி, நூல் நிலையத்தினர் நமது இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆணையர் திரு யு. சுப்ரமணியன், ஐ.ஏ.எஸ்., அவர்களின் உதவியை வேண்டி அணுகினர். ஆணையர் அவர்களும், நமது துறையின் மூலம் வெளியிடப் பெற்று வரும் ''திருக்கோயில்'' திங்கள் இதழில், திங்கள்தோறும் சில பக்கங்களில், நூல் நிலைய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு உதவலாம் என்று, அன்பு கூர்ந்து இசைவு அளித்தனர். அதன்பேரில் முதல் நூலாக ''வயலூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி'' என்னும் இந்நூல், நமது ''திருக்கோயில்'' இதழில் வெளியிடப் பெறுகின்றது.

வயலூர், திருச்சிராப்பள்ளியை அடுத்து உள்ள சிறந்ததொரு முருகன் தலம். அருணகிரியார் திருப்புகழில் பல இடங்களில், வயலூரா! வயலூரா! என்று இத்தலத்தின் முருகனைப் போற்றுகின்றார். இத்தலம் இராசகம்பீர வளநாட்டைச் சார்ந்தது என்பர். அருணகிரியார் தமது திருப்புகழில் ''இராஜகம்பீர நாடாளும் நாயக'' என்றே, இத்தலத்து முருகனைக் குறிக்கின்றார். இத்தலத்தின் முருகப் பெருமான் மீது, 19ஆம் நூற்றாண்டில், டாக்டர் ஐயரவர்களின் ஆசிரியப்பிரான் ஆகிய மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் இளமைக் கால மாணாக்கர் ஆகிய வயலூர் உபாத்தியாயர் சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றியதே, ''வயலூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி'' என்னும் இந்த நூல்! இவ்வுண்மை டாக்டர் ஐயரவர்கள் எழுதிய 'மீனாட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரம்', முதற் பாகம் 117ஆம் பக்கத்தால் அறியப்படுகின்றது.

அண்மைக் கால நூற்றாண்டுகளில், நம் தமிழில் வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி என்ற பெயரில், சிறு பிரபந்தங்கள் பலப்பல தோன்றலாயின. பத்துப் பாடற்கு ஒரு சந்தம் ஆகப் பத்துச் சந்தங்களைக் கொண்டதாய், அந்தாதி முறையில், நூறு பாடல்களில் அமைவது, பதிற்றுப் பத்தந்தாதி எனப்படும். திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி, மதுரைப் பதிற்றுப் பத்து அந்தாதி என்பவை, மிகவும் புகழ் பெற்ற நூல்களாகும். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய பலவகைப் பிரபந்தங்களில், பதிற்றுப் பத்து அந்தாதி நூல்களாக, ஆறு நூல்கள் இயற்றப் பெற்றுள்ளன. அம்முறையில் எளிய நடையும், இனிய ஓசை நயமும் பொருந்தி இயன்றுள்ள இந்த வயலூர்ப் பதிற்றுப் பத்தாதி, நமது ''திருக்கோயில்'' நவம்பர் மாத இதழில், முருகனின் அறுநாட் பெருவிழா (கந்தர் சஷ்டி) விழாவை ஒட்டி வெளிவரத் துவங்குவது, மிக்க சிறப்பும் பொருத்தமும் உடையதாகும். இதனை அடுத்து மேலும் பலப்பல சிறு பிரபந்தங்கள் நமது திருக்கோயில் இதழில் தொடர்ந்து வெளிவரும்.

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் நூல்நிலையத்தின் சார்பில், நமது திருக்கோயில் இதழில் இந்நூல் வெளிவருவதற்குத் துணைபுரிபவரும், டாக்டர் ஐயரவர்களின் அருமைப் பெயரரும் ஆகிய திரு க. சுப்பிரமணிய ஐயர், பி. ஏ., அவர்களுக்கும், மற்றும் அந்நூல் நிலையத்துடன் தொடர்புடைய பெருமக்கள் பலருக்கும், இந்நூலை ஓலையேட்டினின்று படி எடுத்துச் செவ்விதின் எழுதித் தந்த மேற்படி நூல் நிலையத்தைச் சேர்ந்த அறிஞர் திரு மு. கோ. இராமன் அவர்களுக்கும், நமது அன்பும் நன்றியும் என்றும் உரியனவாகும்.]

நூலின் ''சிறப்புப் பாயிரப் பாடல்கள்'' முதலியன, அடுத்த பக்கத்திலிருந்து ஆரம்பமாகின்றன....

—ஆசிரியர்.

## சிறப்புப் பாயிரப் பாடல்கள்

### மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை

தந்தையென வரையகப்பெண் தழுவிநெடுங்
கொக்கிறுத்துச் சயிலங் கைக்கொண்(டு)
அந்தமுறு தலையாறு கொண்டுவய
லூர்மருவி அடியார்க் கின்பம்
சந்ததமுந் தருங்குமர வேளுக்கோ
ரந்தாதி சாற்றி னானல்
கந்தமிகு தமிழுணர்ந்த சுந்தரநா
வலனென்னுங் கருணை யோனே.

### அட்டாவதானம் சுப்பு செட்டியார்

சுந்தமிழி மலர்த்தடஞ்சூழ் வயலூர்வாழ்
கதிர்வடிவேற் கரத்தா னேங்கச்
செந்தமிழின் கடல்கடைந்து தெள்ளமுதாம்
அந்தாதி திரட்டி னானல்
பைந்தமிழின் கலையுணர்ந்த சுந்தரமால்
பண்ணவர்கண் முதலோர் வேலை
யிந்தமிழ்தின் சுவைவெறுத்தா லிவன்றமிழின்
வியப்பினையா ரியம்பு வோரே.

### அருளாண்டி உபாத்தியாயர்

சாந்திமதி யானவுரை சேரினிய
சுந்தரகந் தரத்தென் சொல்
மாந்திமதித் தழையிழந்து வாடுமனு
டத்தருக்கள் வரம்பில் கொம்பர்
ஏந்திமதி யூர்பொழில்சூழ் வயலூரிற்
றங்குகுகன் என்குன் றின்மேற்
காந்திமதி மனம்பதிற்றுப் பத்துமழை
பெய்ததுண்டு களிக்கு மாதோ

### சின்னைய உபாத்தியாயர்

புயலூரும் மகபதிதன் புதல்விதனைக்
குறமகளைப் புணருஞ் செவ்வேள்
செயலூருங் கங்கைகுல நயகுணவான்
சுந்தரவேள் சிந்தை கூர்ந்து
வயலூரந் தாதியென வகுத்துரைத்த
செந்தமிழின் மாலை தன்னைக்
கயலூருங் கொடிபடைத்தோற் கருள்குமரர்க்
கற்புதமாய்க் கருத லாமே.

### மாணுக்கன் இராமசாமி

பொங்கிநிறை தமிழ்க்கடலை மதித்துவயற்
பதியிலகு புனிதச் செவ்வேள்
தங்குபுக ழமுதெடுத்தந் தாதியெனும்
பெயர்சாத்தித் தனிநற் பூவிற்
சங்கமுத லாய்ப்புதல்வர் இருசெவியிற்
புகட்டினன்முத் தமிழை யாய்ந்து
தொங்கலணிந் திடுவலவ னெனையாள்சுந்
தரக்குருவாந் தூய மாலே

## வயலூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி

(காப்பு)

### விநாயகர் துதி

மணியார் வனசத் திழிதேறல்
மடைவாய்ப் பெருகி யூற்றெடுக்கும்
அணியார் வயலூர் பதிற்றுப்பத்
தந்தா தித்தார் அரும்புனத்துக்
கணியா கியமுத் துக்குமரக்
கடவுட் சரண மிசைசூட்டத்
திணியார் ஒருகோட் டைங்கரத்துத்
தேவ னடியைப் பணிவாமால் (1)

### சிவபிரான் துதி

மன்னி அனைய ருதரத்து
வருமேழ் பிறப்பு மகற்றிடுவான்
சென்னி யொருநான் குடையாற்கும்
திருமால் தனக்கும் சிருட்டிதிதி
யுன்னி யளித்தன் னேரேமாப்
புரல்கண் டனங்கன் றனையெரித்தவ்
வன்னி வடிவா ரெம்பெருமான்
மலர்த்தாள் முடிமேல் வைத்திடுவாம். (2)

### அம்பிகை துதி

முழக்கலைகள் தங்கியப கீரதியை யெம்மண்ணல்
முன்னிமுடி மேல்வைத்த தால்
வழக்கறு மனத்துன்னி ஊடலிற் றிருவடியை
வைத்துநா ணிலை யெனநதி
யுழக்கவடி வேலனைய ளித்தினிம னப்பகை
ஒழிந்ததென எண்ணி மகிழ்வாற்
கிழக்கடசு நாயகியின் அம்புயச் சேவடிக்
கீழ்ப் பணிந் துய்வாமரோ. (3)

### முத்துக்குமரன் துதி

வித்துக் குளூறு மரும்பொருளாய்
வியனூர் கலிசூர் முதல்கிரியை
மத்துக் குடையுந் தயிர்போல
மடித்தும் பொதியன் தனையாண்டும்
நத்துக் குழாமீன் மணியினலர்
நறவார் குமுத வயலூர்வாழ்
முத்துக் குமரக் கடவுளன்றி
மொழியா தென்வாய் பிறர்களையே. (4)

### நால்வர் துதி

கார்நிறவன் சமண்குண்டர் கழுவேற
அருள்செய்கவு ணியர்கோன்தாளும்
ஆர்கலியிற் சிலைமிதக்க அருள்பெற்ற
திருநாவுக்(கு) அரசர் தாளும்
தார்மலிநற் பரவையருக் கினிதருளும்
சுந்தரர்பூந் தாளும் வாத
ஊர்திகழ வந்தெனையாள் மணிவாச
கர்தாளும் உளம்வைத் துய்வாம். (5)

### சரசுவதி துதி

திண்டா ருகனைப் பொருதியருந்
தேவர்க் கிடுக்கண் தீர்த்தசெயல்
பண்டா ரணங்கள் ஓர்ந்தறியாப்
பகவற் கியற்செந் தமிழ்பாட
வண்டார் குழலுந் துகிரனைய
வாயும் பொருவில் படிகநிற
வெண்டா மரையாள் அரவிந்த
வியன்தா ளென்றும் நயந்துய்வாம். (6)

### கறுப்பண்ணசாமி துதி

மணிவளர்பாற் கடனிகராம் பெருஞ்செல்வக்
குடிமல்கு வயலூர் வேளைக்
கனிவளர்குன் றகவாணர் பூங்கொடிசேர்
கற்பகத்தைக் கருமஞ் சேபோற்
பணிவளர்வோன் மருகோனைத் துதிசெய்ய
இடையூறு படரா வண்ணம்
அணிவளர்தே ரடிவளரும் கறுப்பண்ண
சுவாமிமலர் அடிகள் போற்றி. (7)

### அருணகிரி துதி

பொருணை யாமண் மடவார்பால்
பொருந்தி யழியு மென்போல்வார்
மருணை யாவின் கதியடையும்
வண்ணம் கடல்சூழ் வையகத்திற்
கருணை வடிவாய்த் திருப்புகழைக்
கார்த்தி கேயர்க் கினிதுரைத்த
அருண கிரியா ரிணையடிப்போ
தகத்தும் சிரத்தும் அமைத்திடுவாம். (8)

### குருவணக்கம்

சடையும் ஒளிர்கங் காநதியும்
தந்தி யுரியும் தாக்குரியும்
விடையும் மலரோன் சிரமும்நுதல்
விழியும் பரந்த மூவிலைவேற்
படையும் கரந்தென் றனையாளப்
படிமா னிடமாய் வந்தவருட்
கொடைமீ னுட்சி சுந்தரநற்
குருதே சிகன்றன் அடிதொழுவாம். (9)

### அவையடக்கம்

தண்டமிழ் ழோர்ந்து நாற்கவி தெரிக்குந்
தகவிற்சான் றோர் கள்முன் சிறியேன்
வண்டமர் வயலூர் ஆறுமா முகனை
வழுத்துதற் கொப்பெடுத் துரைக்கில்
அண்டர்வாழ் பதியும் அகிலமுங் கொட்புற்
றடுக்கழிந் திடச்சினந் தடிக்கும்
சண்டமா ருதமுன் எள்சிறை விரித்துத்
தான்பறந் திடுஞ்சிறப் பாமால். (10)

## நூல்

பூவார் மறையோன் புனற்றுயில்வோன்
போற்று நுதற்கண் ணவற்கருள்செய்
தேவா வென்ன அஞ்சலிக்குந்
திறங்கொண் டறியா நாயேற்குக்
காவார் வயலூர்க் கரசேபூங்
கடப்பந் தொடையை யணிந்தவனே
தூவார் அயிலா நினைப்போற்றுந்
தொழிலின் றருள்வ துன்செயலே. (1)

செயலொன் றறியா தரிவையர்கள்
சீவார் கழலை விரும்பியவர்
மயலிற் படிந்து தினந்தோறும்
வருந்தி யுழலும் மடநெஞ்சே
வயலூர் அமர்சண் முகவனிரு
மலர்த்தா ளுறநீ விரும்புவையேல்
புயலூர் தியன்முற் றேவரெலாம்
புகழுங் கதியீ குவன்மெய்யே. (2)

மெய்யைச் சுமந்து பலகாலும்
வேலை யதனை ஐம்பொறிக்குச்
செய்யத் துணிந்த மானிடர்காள்
திரும்பிப் பிறவா தானந்தத்(து)
உய்யும் படிக்கு மருந்தொன்றுண்(டு)
உரைப்பேன் வயலூர் தனிலமர்ந்த
வையுண் கறைதங் கிடுவேலோன்
மலர்த்தா ளிதுநிச் சயமாமே. (3)

ஆமாலையில் ஓட்டிய மாற்கன்று
ஆழி கொடுத்த தேவன்நுதற்
கோமாண் புடன்வந் தெனையாளும்
கோவே சுரும்பர் குழாமுளரித்
தேமாந் துழலும் வயலூர்வாழ்
தேவ தேவே யரிவையர்கண்
பூமா லையைக்கண் டஞ்சாமற்
புரிந்தே யருள்நின் பொன்னடியே. (4)

அடியேன் றனையாள் நின்னையன்றி
யான்மற் றோரை யகத்துன்னேன்
படியேன் நினது பெயரன்றிப்
பணியேன் நினதன் பரையல்லால்
பிடியேன் நினது பதமன்றிப்
பெரிய புணையா வயலூரா!
துடியே ரிடைக்குஞ் சரிமகிழ்நா!
சுரரை யளித்த பெருமானே. (5)

மானந் தவிர்த்துப் பிறர்பொருளை
வவ்வும் கள்வர் தமைப்போல
ஈனத் தொழில்இக் கிருமியுடற்(கு)
எடுத்துன் னடிபே ணுவெனக்கு
மோனத் துருவாய் வயலூர்வாழ்
முதலே நினதின் னருள்தருவாய்
ஏன லளித்த குறமானுக்(கு)
இயைந்தாய் வடிவே லிறையோனே. (6)

இறையே அமரர் சிறைமீட்ட
எந்தாய் மலர்மா ளிகைவிளங்கும்
மறையோன் சென்னி யிற்குட்டும்
மருந்தே வயலூர் மணிவிளக்கே
முறையே தவிர்சூர் முதல்தடிந்த
முருகா எளியேன் கண்காணச்
சிறையோங் கியமஞ் ஞையில்வருவாய்
சேவற் பதாகைச் சேவகனே (7)

அகம்நைந் துருகேன் மலர்தூ வேன்
அக்கப் புனலா லுடல்நனையேன்
துகள்தீர் நினது திருநாமம்
சொல்லேன் நினது தூவன்பர்
உகவும் பணியொன் றெனும்புரியா(து)
ஊம னுகிச் சுழல்வேற்கு
மகம்நல் மறையோர் தினம்வளர்க்கும்
வயலூர்ப் புனித வந்தருளே. (8)

வந்தித் திறைஞ்ச முடிதந்தாய்
மலர்தூய்ப் பணியக் கரந்தந்தாய்
சிந்தித் துருக மனந்தந்தாய்
சிறப்பை யறிய விழிதந்தாய்
முந்தித் துதிக்க நாத்தந்தாய்
முகில்நேர் குழலார் மயல்நீக்கத்
தந்திக் கிளைய வயலூரா
தாரா திருந்த விதமென்னே. (9)

என்நா வலர்காள் மடற்பனைபோல்
ஈயா உலுத்தப் பதடிகளைக்
கன்னு! புனிதா! முகிலெனவே
கதறிப் பலநாள் தனைக்கழித்தீர்
மின்னுர் சடிலப் பரன்மகவாய்
விளங்கும் வயலூ ரனைப்பாடில்
பொன்னுட் டரசுங் கதியுமருள்
புரிவான் அமரர் புண்ணியனே. (10)

(வேறு)

இயல்பொன்றெனு மறியேன்நின தீர்ந்தாளென்
றும் பணியேன்
மயல்தங்கிய மானுர்கள்பின் மறுகிச்சுழல்
வேற்குக்
கயல்விஞ்சிய கொடியாற்றெறு கண்ணேன் தரு
மகவே
வியல்விஞ்சிய வயலூ ருறை வீராசுரர் தேவே.
(11)

தேவேநினை யல்லாற்பிறந் துழல்தேவரைச்
சேரேன்
கோவேநின தடியாரன்றி மற்றேரொடு
கூடேன்
பூவேறிய மறையோனரி புவிமீதென்முன்
வரினும்
காவேய்மலர் மதுவாய்வய லூராய்கரு தேனே.
(12)

தேனுர்மொழிக் குறமான்மயல் செறிந்தேனுமிற
லருங்
கானுர்புனத் தயலேமலர்க் கணியாகிய பரனே
வேனுயக வயலூ ரமர் விமலாஅரன் புதல்வா
நானுவிதப் பணியாலுனைப் பணிவேனருள்
நலமே. (13)

நலநாயக கிரிசூர்கடல் நந்தச் செய்தகந்தா
புலனுனவைந் தினுக்கேபணி புரியத்தவ முற்
றேற்(கு)
இலனுயெங்கும் உளனுய்வய லூர்மேவிய
எந்தாய்
திலனுவில்ஒன் றெனுமுன்னருள் தருவாய்சுரர்
தேவே. (14)

வேயஞ்சிய தோளார்குற மின்னைப்புணர் விமலா
தோயஞ்சித நிடவேல்விடு தூயாபிறந்துழலும்
மாயங்கெடுத் துய்யும்வகை அறியேன்பண
வரவின்
பாயற்றுயில் நெடியோன்பணி வயலூர்கண
பரனே. (15)

கண்ணுன்மணி பெய்யுங்கழை புடைசூழ்வய
லூர்வாழ்
அண்ணுமறைப் பொருளேபரம் ~~~யென
வுளத்தில்
எண்ணுதெழு பிறவிக்கிட னுகித்துயர் ஏற்றிப்
புண்ணுக்கையைச் சுமந்தேற்குன
தருளெங்ஙனம் புகலே (16)

கலமார்மலைத் தனமாதர்சொற் கனியாகிய
மூளையும்
நிலம்மாதனம் இல்லம்பிற மற்றுநினைந்
தேங்கிப்
பலமாவடர் வயலூரநின் அடியைப் பணியாமல்
குலமானிடர் நிந்தைக்குட னுனேன்அருள்
கூரே (17)

அருடாவின தடியார்களுக் கடிமைத்தொழில்,
புரிய
தெருடாவய லூர்மேவிய தேவாகுற மானுர்
புருடாசைவ சமயத்திற மிஃதன்றெனப் புவிமீக்
குருடாய்த்தெரி யாமற்சுழன் றுழமும்கொடி
யேற்கே. (18)

கொடியச்சம யப்புன்பத டிகள்வீடருள் கோதில்
பொடியைத்தரி யாமற்சுணங் கெனுப்பல
பொய்யாற்
படியிற்சுழல் வதுமும்மையின் னினைப்பணி
யார்பொன்
முடியிற்செறி மணிமாளிகை வயலூருறை
முதலே. (19)

தலமோநெடுஞ் சலமோஅழல் தானேவளி
யோசஞ்
சலமோவிய வெளியோமலர் அயன்சாற்றுறு
மறையின்
குலமோஇரு கதிரோஇவற் றெதுவென்றுனைக்
குறிப்பேன்
நலமோங்கிய வயலூர்வளர் நம்பாஅருள்
புரியே. (20)

(வேறு)

புரிசை மூன்றையும் நொடிக்குளேபொடி
படுத்தி வைத்தவர் குளத்திலா
ளெரி கண்ஒன்றில் வருகுழகனே மும்மல
இருளிலே முழுகு நாயினேற்
கரிய தந்தைதம ரனையு மாகிவளர்
அப்பனே உலகில் ஒப்பிலாய்
பெரியனே வயனகர்க்குள் வாழ்சுரர்
பெருந்த காயருள் முத்தியே. (21)

முத்தி ழைத்தநகை மாதர் பால்மையல்
முயன்று வாடுமுல கத்தரே
மொத்து சண்டன்வரு நாளி லெங்ஙனம்
முடுகிப் புகப்படுவிர் நாடெலாம்
பத்தி யோங்கநெறி வித்து வித்திய
வயற்ப திக்கணமர் பானுவைத்
துத்தி யஞ்செய்தவ னன்பரோ டுறுதிர்
துதிப்ப னுங்களையந் நமனுமே. (22)

மனமு வந்துபுவி மிசையி றந்துடன்
வருந்தொழில் செறியு மானுடர்க்(கு)
அனைய வர்கண விருப்பை நீக்கலுநின்
அன்ப ருக்கடிமை புரிதலும்
தனம டந்தையர்கள் ஆசை நீங்குதலும்
என்கடன் சரம திசையினில்
சுனைபொ ருந்துவய லூரவந்தருள்வ
துன்கடன் சுரர்கள் துணைவனே. (23)

துணைய தாகிவரு முடலைநம்பி யழி
தொழில்பு ரிந்துபுவி மீதுபுட்(கு)
இணைய தோன்றியகு டம்பை யன்னதென
எண்ணிலாப் படிற னுக்கருள்
புணைய தாகநின தடியை மஞ்சுலவு
பொழில்செ றிந்தவய லூரனே!
அணை யராக் குரிசில்மருக ஐங்கணை
பொடித்த வன்மகன் எனப்பனே. (24)

பன்ன கத்தில்விழி வளரு மாற்குரிவை
குந்த மென்னும்உயர் பதியினை
இந்நி லைக்கனருள் வாயெனுஞ் சிறிதும்
எண்ணிடேன் இலகு மஞ்ஞையோய்
முன்னி முற்றவும்நொ றுக்கிவெற்றி கொடு
முன்வந் தாலினிய முளரியார்
பொன்னி றச்சரண நிழல்வ யல்நகர்க்குள்
பொருந்தி மேவுமுயர் புனிதனே. (25)

புனித கஞ்சமலி வயன கர்க்குள்வளர்
புலவனே பிரம னுலகை யெற்
கினித ளித்துயர்சி ருட்டிசெய் யென
இயம்பி னுமதனி லெய்திடேன்
துனியனத் தொடவ னுலக முற்றவுந்
தொலைத்த துன்கொடிபி றப்பினை
நனித கர்த்தர விந்தபாத நிழல்
நல்கு வாயவனி நாதனே. (26)

நாத னேயடிய வர்கட்க லற்புணரி
நீந்த நற்புணையெ னத்தரும்,
பாத னேவய னகர்க்குள்வாழ் குமர
பரம னேமறைகள் துதிசெயும்
நீத னேமகவ னைப்புரந்தருளு நிமல
னேகலச முனியை யாள்
வேத னேயடிய னுக்கு னைப்பணியும்
வேலை தந்தருள வேணுமே. (27)

வேணி யண்ணலடி மீது கண்மலர்
விருப்பி னிற்புனையு நாரணன்
வாணி யாவல்கொளு மைந்தன் இந்திரனிவர்
மருவு மின்பமுற வருள்செய்தாய்
பாணி மைந்தவய லூரவெற் குன்அர
விந்த பாதநிழல் படிறிலாக்
காணி யாயருள்செய் பூண்மு லைக்குறமி
னைக்க லந்திலகு கந்தனே. (28)

கந்த மார்தருக டப்பமாலையணி காவலன்
வயன கர்க்குள் வாழ்
சுந்த ரன்சுரர்க ளுக்குறும் பகை
துடைத்தவன் சுரநதிக் குமா
மைந்த னம்புயம லர்ப்பதம் பரவு
மலரயற் குலகி னைத்தரத்
தந்த வன்பெயரெ டுத்துரைப் பர்தவர்
மற்று ளோர்தவமி லார்களே. (29)

தவறி றந்திட மருந்து வாமதி
தருக்கண் மொய்த்த பொழிலிற்புகக்
குவடு ரிஞ்சிடவு டற் குறைந் தெழில்
குலைந்து நெற்றிவிழி யண்ணல்பாற்
றவமிப் யற்றியுருப் பெற்றிடச் செய்வய
லூரமர்ந் திலகு சாமியே
பவமறுப் பனுல கத்தரேபிற கடவுளைப்பணிதல்
வெகு பாவமே. (30)

(வேறு)

வம்மின்பன் மணிகொழிக்கும் வாரிசூழ்
வையகத்திற்
றம்மையே பரமனெனத் தருக்கிநிற்குந் தறு
கணர்காள்
கொம்மைவரி முலைவள்ளி கொழுநனைச்செங்
கரங்கூப்பிச்
செம்மலரார் வயலூரிற் றென்றிறைஞ்சீர்
தெளிவதற்கே. (31)

தெளிவிலாப் புன்சமயச் சிதடர்கள்பாற் சேராது
அளிதந்தா யினியென்ன யான்பெறும்பே றளிக்
குலங்கள்
களிசந்தா னத்தினிற்போய் மலருகுக்கு கற்ப
கனுக்(கு)
ஒளிதந்தாய் உலகமகிழ் ஒருவயலூர்ப் பெரு
முதலே. (32)

தலனெலாம் புகழ்வயலூர் தனையணுகி யந்தரத்
தோர்
குலனெலாம் பணிவள்ளி நாயகனைக் கொண்
டாடில்
பலனெலாம் அளிப்பன்விடும் பால்விக்குங்
கடைநாளில்
நலனெலாம் வினவிவரும் நமன்பணிவன் பிண
நெஞ்சே. (33)

நெஞ்சத்து ளறிவாகி நிறைவானை நிறை
யெழில்சேர்
குஞ்சரி மணவாள னுகிவரு கோமானை
அஞ்சல்தவிர்த் தாட்கொண்ட அண்ணலைப்
பொன்ஆலயமாங்
கஞ்சமலர் சூழ்வயலூ ராலயத்திற் கண்டேனே.
(34)

கண்டவுட னறம்பெருகும் கழல்பரவிற்
பொருள்பெருகும்
வண்டர்செறி மலர்தூவின் மாருவின் பம்
பெருகும்
தொண்டுசெயில் வீடுண்டாம் தோகைமயிற்
பெருமானை
மண்டயங்கு மானிடர்காள் வயலூரிற் போய
டைந்தே. (35)

அடைக்கலநின் றுளிணைக்கன் றுக்குலத்தைக்
காக்கமலை
குடைக்கவித்தான் மருகாவும் பரைக்காத்த
கோமானே
மடைக்கமல நறவொழுகு வயலூர்வாழ் மா
மணியே
தொடைக்கடம்பா புனவள்ளி மகிழவருந்
தொல்லோனே. (36)

தொல்லையே ஒருருவாய்த் தோன்றினே னஃ
தோட்ட
வல்லைநீ எனப்பணிந்தேன் அருள்செய்வாய்
மான்மகள்பால்
ஒல்லைபோ யவள்பணியா ளெனப்பணிந்த ஒரு
முதலே
எல்லையிலா கமம்முழங்கு வயலூர்வாழ்
எம்மானே. (37)

மான்மகனைப் பொடித்தவண்ணல் மகவேநன்
மலர்மேவு
நான்முகன்சென் னியிற் குட்டு நாயகநற் சுரும்
பலரும்
கான்மலிநீ பத்தாராய் கடையேனைக் காமுளரித்
தேன்மறுகு தொறுபாயும் வயலூர்வாழ்
தேசிகனே. (38)

தேசிகமுற் றிடுவதனத் தெரிவையர்கள் மயற்
காந்தத்(து)
ஊசியெனப் பட்டுழல்வேற் குனதருளெங் ஙன
முளதோ
மாசிலயிற் படையாளா மாமணியே திதிபுணரக்
காசிபற்கு வருஞ்சிறுவர் பணிவயலூர்க்
காவலனே. (39)

வலனேமிப் படையோற்கும் மலரயற்கும் பதி
கொடுத்த
வலனேசூர்க் கடல்செற்ற மணிப்படையாய்
குணக்குன்றே
கலனேந்துந் தனக்குறத்தி காதலனே வயலூர்
நின்
மலனேநா யேற்கருள்செய் மாமஞ்ஞைப் பரி
யோனே. (40)

பரிகளி ரிரத மொடுபதா தியையும்
படைத்தலை மணிகளை யெரியும்
திரிசல மரையிற் கலையென வுடுக்கும்
திண்ணிய வுலகினைப் புரக்கும்
அரசவாழ் வதனை விரும்பியைம் புலனை
அவித்திடாப் பணிசெயு நெஞ்சே
புரிசைசூழ் வயலூ ராற்கொரு கடிகை
யாயினும் பணிபுரிந் துய்யே. (41)

பணிமதி யறுகும் புனையரன் வாம
பாகமா யிமயமங் கையரை
அணியுறச் சேர்த்த நுதற்கணர ருள்செய்
அப்பனே ஒப்பிலா மணியே
கணியின துருவா யரும்புனத் திருந்த
கடவுளே பிறப்பெனுங் கொடிய
பிணியினுற் றளர்ந்தேற் கருள்செய் நல்
வயலூர் மேவிய பிரணவப் பொருளே.
(42)

பொருகதா யுதமும் பாசமு மேந்திப்
போத்தினைக் கடவிவெங் காலன்
வருமுனங் கலப மயிற்பரி மிசைநன்
மடப்பிடி யார்குற மானுர்
இருவரோ டயிலுஞ் சேவலுங் கொடுவந்
தெளியனை யாளம ரர்களைந்
தருமல ருகுத்துச் சூழ்ந்துநின் றேத்துந்
தனிவய லூர்ச்சிகா மணியே. (43)

காமதே னுவைப் போற் றிடுமக வான்றன்
கவினர சளிப்பினுங் கருதேன்
தேமலி மலையத் தருந்தவம் புரியும்
சீர்மலை முனிசினங் கோண
ஏம்மா முலகம் பணியுமவ் வரசை
இழைத்தன னரவெனச் சந்தத்
தூமமார் வயலூ ரண்ணநின் தாட்குத்
தொழும்பியற் றிடவருள் சுரனே. (44)

சுரந்தபல் சேனைதகுவர்பா லயிலைத்
துறந்தவர் மறம்புரி நோக்கங்
கரந்தமு தாக்கும் அரிவையர் வேட்கை
கழிந்திடா வெற்குன தருள்தா
பரம்பரப் பொருளென் றுணர்ந்தர்க்(கு) உளையப்
பகர்ந்திலர்க் கிலனுய்ப் பதுமம்
வரம்பெலா மருண னெளியெனக் காட்டும்
வயனகர்க் கினியநன் மருந்தே. (45)

மருந்தென வடியர்க் கெழுபிறப் பெனுநோய்
மாற்றவந் தறம்பொரு ளொடுநன்
முருந்தெயிற் றவர்தம் இன்பமும் நீக்கி
முடிவிலாக் கதியளித் தவனே
பொருந்தலர் தம்பால் அயில்விடும் பரனே
புழுமலக் கட்டுடை நாயேற்(கு)
அருந்தவ ருறையும் வயனகர்க் கரசே
அருள்மறை பணியும்வா ரிதியே. (46)

வார்பொருங் கலச முலைக்குற மானை
மருவிய புனிதனே கடப்பந்
தார்பெறுந் தோளா பிரணவப் பொருளே
தந்திமா முகவர்பின் னவனே
சூர்கடல் கிரியோ டடியவர் பிறப்புந்
துணித்தவா தண்டலை யொடுமைக்
கார்பொரும் வயலூ ரையனே நாயேற்
கழித்திடா தருள்வதுன் கடனே. (47)

கடல்பல அங்கை தனிலெடுத் தருந்துங்
கலசமா முனிக்குயர் ஞானந்
திடமுற வளித்த மௌனதே சிகனே!
தீதிலா மணிவிளக் கொளியே
தடநிறை வயலூர்த் தலைவனே கொடிய
தகுவரைத் துணித்தவா அனையார்
குடநிகர் தனத்தை யருந்திடா தெற்குக்
கொடுத்தருள் பண்ணவர் கோவே. (48)

கோவையங் கனிவாய்க் குடமுலைத் தீஞ்சொற்
குறமின்னை யளித்திடு மென்ன
மாவையங் கையா லேற்றுடன் பொசித்த
வள்ளலே யெள்ளிடா தெனையாள்
பூவைகள் பிரண வத்தினை யோதப்
புனிற்றிளங் கிள்ளைக ளிறைஞ்சுங்
காவை சூழ் வயலூ ரமலநீ பத்தார்
கலந்த தோட் சயிலநா யகனே. (49)

அகத்தருஞ் சமய மென்னவும் தீமை
அடர்புறச் சமயமென் னவுமிச்
சகத்தவ ருரைக்கு மிருதிறப் பாலுட்
சைவமாச் சமயமுற் றம்போ
ருகத்தவன் கொளுமங் களிப்பில னன்னேற்
குறுவதி லோர்சிரந் தடிந்த
நகத்தவன் புதல்வ வயற்பதி யாநின்
நல்லடி காணப்பெற் றேனே. (50)

—(தொடரும்)

# நடன கோபால நாயகி சுவாமிகள்

(திரு கே. ஆர் கிருஷ்ணமாச்சாரியார், தாராபுரம்)

தவத்திரு நடன கோபால நாயகி சுவாமிகள், சௌராட்டிர அந்தணர் மரபில் அவதரித்த மகான் ஆவார். 'மதுரையின் ஜோதி' என்று புகழப்படுபவர். இருபதாம் நூற்றுண்டில் பக்தி மார்க்கத்தை மக்களுக்கு உணர்த்திய மகான்களில் ஒருவராவார். கண்ணன் மேல் அளவிட முடியாத பக்தி கொண்டவர். ஒன்பது வித பக்திகளில், இறைவனிடம் நெருங்கி உரிமையுடன் உறவாட ஏற்றதான நாயகி பாவத்தை, இவர் கைக்கொண்டார். எனவே இராமபத்திரர் என்ற இயற் பெயர் மறைந்து, நடன கோபால நாயகி என்ற பெயர் இவருக்கு நிலைத்தது. இவரது நாயகி பாவத்தைக் கண்ணுற்ற ஜீயர் சுவாமிகள் இவருக்கு இந்நாமத்தைச் சூட்டினுர். இவர் கண்ணனை நாயகனுகவும், தன்னை அவர்தம் நாயகியாகவும் வரித்துக் கொண்டார். கண்ணனுக்கு நாயகியானதால் நாயகனுன கண்ணனைப் பாடுவதிலேயே காலம் முழுவதும் கழித்தவர். மணம் செய்து கொள்ளாமல் நைட்டிக பிரம்மசாரியாகவே விளங்கினுர். இவர் கண்ணன்மேல் காதல் கொண்டு, தமது தாய்மொழியான சௌராட்டிர மொழியிலும், செந்தமிழிலும் ஏராளமான பாடல்களைப் பாடியுள்ளார். அவைகள் பக்திச் சுவையும், உயர் கருத்துச் செறிவும் கொண்டவை. இவர் தேன் தமிழில் கண்ணனைப் பிரிந்த நிலையைக் கூறிப் பாடியுள்ள கண்ணி வகைப் பாடல்கள் சிலவற்றைப் பார்ப்போம். கண்ணனைப் பிரிந்த இவர் மனம் என்ன பாடுபடுகின்றது பாருங்கள்.

1. அறம் புரியாதார் மனம்போல் அழுக்குற்றதே நெஞ்சம்
கறவைகள் பின்னுலே வரும் காளையின் தாள் தஞ்சம்.

அறத்தைப் புரியாதார் நெஞ்சம் அழுக்குடைய, மாசுடைய நெஞ்சாகும். அதுபோல் கண்ணனைக் காணுத என் நெஞ்சும் அழுக்குடையதாகும் என்கிருர் சுவாமிகள். இதன் மூலம் எவரும் அறம் செய்து நெஞ்சழுக்கை நீக்கிக் கொள்ள முடியுமென்றும் நமக்கு எடுத்துக் கூறுகின்ருர். இரண்டாவது அடியில் கறவைப் பசுக்கள் பின்னுல் சூழ்ந்து வர அவற்றை வழி நடாத்திச் செல்லும் குழலூதியான, காளையான கண்ணனின் அடிகளைத் தஞ்சம் அடைகின்றேன் என்கிருர் சுவாமிகள்.

2. பரிகொடுத்தவர் போல பரதவிக்குதே என்நெஞ்சம்
கரிய திருமேனியன் கமலப்பதம் தஞ்சம்

ஒன்றை நாம் நம்மையறியாமல் பறிகொடுத்துவிட்டால், நம் மனம் எப்படி அலைபாயும். பரதவிக்கும். தேடுவதென்ன, ஓடுவதென்ன, கண்ணீர் சிந்துவதென்ன, கைகள் பிசைவதென்ன, அப்பப்பா எத்தனை ஆர்ப்பாட்டங்கள். அதைப் போல் இருக்கின்றது இந்தக் கண்ண பரமாத்மாவைக் காணுதது. கரிய வடிவான கண்ணனின் தாமரை அடிகள் தான், எனக்கு அடைக்கலமாகும் என்கிருர் சுவாமிகள்.

3. ஆத்ம சம்பந்தமிருக்க அகல நடந்தானே
சாத்வீகத் தெய்வமென நான் சரணம் அடைந்தேனே.

நாம் ஆத்மாக்கள். அவன் பரமாத்மா. மனித ஆத்மாக்கள் பரமாத்மாவான கண்ணனின் அடியார்கள். இத்தகைய ஆத்ம சம்பந்தம் எனக்கும் அவனுக்குமிருக்க, அதை அறிந்தும் அறியாதவன் போல் சென்றுவிட்டானே, அந்த மாயவன். ஆயினும் அவன் என்னைக் காப்பான். ஏனெனில் அவன் சாத்வீக தெய்வமாவான். நான் அவன் மலரடிகளைச் சரணடைகின்றேன்.

4. பாதமலரல்லால் துணை பாவாய் நமக் குண்டோ?
நாதனவனே நமக்கு நாயகன் வேறுண்டோ?

தோழியிடம் நாயகி சுவாமிகள் எடுத்துரைப்பது போல் அமைந்தவை இப்பாடல்கள். அதாவது ஆய்ச்சியர் (கோபியர்), தனது தோழியிடம் சொல்வது போல் சொல்கிருர். பெண்ணே! கண்ணனின் பாதமலரல்லாமல் நமக்கு வேறு துணை உண்டோ என்கிருர். இவ்வுலகில் இறைவன் ஒருவனே புருடன். சீவர்கள் மனைவிமார்கள் என்று ஒரு தத்துவம் உண்டு. அதன்படி நாமனைவரும் இறைவனின் மனைவிமார்கள். எனவே சுவாமிகள் தோழியைப் பார்த்துக் கூறுவதாக அமைந்த இப்பாடல், நம்மைப் பார்த்துக் கூறுவதாகும். நமக்கு நாயகன் (தலைவன்) கண்ணன் என்கிருர்.

5. எக்குற்றங்களும் கொண்டருளும் எம் பெருமானே
மக்களைப் பெருத மலடி மனங்கொண்டானே.

இந்தக் கண்ணன் இருக்கின்ருனே எப்படிப்பட்டவன் என்று எண்ணுகிறீர்கள்? அடியார்கள் செய்யும் எக்குற்றத்தையும் மன்னித்து, அவர்களை ஆட்கொள்ளும் இயல்புடையவன். எனவே

நான் என்ன குற்றம் செய்திருப்பினும், பொறுத்து என்னுடனே இருப்பான். அத்தகையவன் ஏனோ இன்று மக்களைப் பெருத மலடியின் மனம்போல், கல் மனம் கொண்டு சென்று விட்டான்.

6. குற்றமிருந்தாலும் குணமாய்அதைக்
கொள வேண்டும்
பெற்றவர் போலப் பெருமாளே பொறுக்க
வேண்டும்

ஏ! கண்ணு! நீதான், நான் குற்றங்கள் ஆயிரம் புரிந்தாலும் பொறுத்துக் கொள்பவனுயிற்றே. ஆகையால் உன் வழக்கப்படி என் குற்றங்கள் அனைத்தையும் மன்னிக்க வேண்டும். உன்னையே எண்ணிக் கொண்டிருக்கும் என்னுடைய நல்ல குணத்தை நீ அறிய மாட்டாயா? மக்கள் என்ன குற்றம் செய்தாலும் பொறுத்து, அவர்களைப் பரிபாலிக்கும் பெற்றோர் போன்று, கண்ணு! நீ என்னை காப்பாயாக. பெருமாளே என்னை ஆட்கொள்வாய்! உன்னைக் காணுது வாடுகின்றேன். வருக என் தலைவா என்கிருர். இங்ஙனம் இவர் பாடியுள்ள நூற்றுக்கணக்கான பாடல்களில், ஒரு சிலதைத்தான் இங்கு விளக்கியுள்ளேன்.

சௌராட்டிர மொழியில் அமைந்த ஒரு பாடலில், கண்ணனை எவ்வளவு உரிமையுடன் அழைக்கின்றுர் என்பதைப் பாருங்கள் :

வாஸுதேவா க்ருப கர்னுஸ்த ரி:யெஸ்தகாய்
வத்தகேர் அவிகினு அத்த மொரஸெர

வாசுதேவனின் மைந்தா! அருள் புரியாமலிருப்பதேன்? இப்பொழுதே என்னுடன் பேசுவாயாக. இதோ படித்துச் சுவைக்கத் தகுந்த இன்னுமொரு நாமாவளிப் பாடல்.

வள்ளல் வாசுதேவ நாமம் என்னும்
தெள்ளமிர்தம் உள்ளே கொண்டால்
கொள்ளைக்காரன் வரமாட்டான் வந்தால்
கொள்ளைக்கிடமில்லாமல் போவான்.

சுவாமிகளின் பக்திப் பாடல்கள் படித்துச் சுவைக்கத் தக்கவை. கருத்துச் செறிவு மிக்கவை. ஆழ்ந்த கவித் திறனை இவரது பாடல்களில் நாம் காண முடிகிறது.

**

# கடவுள் அல்லாமல், வேறு எது ?

உலகப் பெரும் புகழ் பெற்ற சிறந்த பெரு நாவலர்களாக அறிஞர்களால் மதித்துப் போற்றப்பெறுபவர்கள், பலர். அவர்களுள் மார்க்கஸ் டல்லியஸ் சிசரோ (Marcus Tullius Cicero) என்பவரும் ஒருவர். இவர், இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், இத்தாலிய நாட்டில் கேயஸ் ஜூலியஸ் சீசர் (Caius Julius Ceasar) என்னும் வரலாற்றுப் புகழ் வாய்ந்த தலைவரின் சமகாலத்தில் (கி.மு. 102—44) வாழ்ந்திருந்தவர். மிகச் சிறந்த உலகப் பெரு நாவலராகப் பிறங்கியிருந்த சிசரோ என்னும் அந்தப் பேரறிஞர், ''உலகிற்குக் கடவுள் ஒருவர் உண்டு'' என்பதனை வலியுறுத்தி அறிவுறுத்தும் முறையிற் பின்வருமாறு கூறியுள்ளார்.

உலகினில் உள்ள பொருள்களில் எல்லாம்,
மனிதனின் உள்ளமும், உணர்வும்,
நிலவிடும் அவன்றன் ஆற்றலும் பிறவும்,
நிகழ்த்தொணு வியத்தகு திறன்ஒன்று,
இலகிநிற் கின்றது; இனியமற் றதுதான்
மனிதனிற் சிறந்துயர்ந் திலங்கும்;
நலமிகும் அதனைக் கடவுள்என் றன்றி,
எதுஎன? நவிலுதல் கூடும்! *

—தமிழாக்கம்: ந. ரா. முருகவேள்.

* "There is something in the nature of things, which the mind of man, which reason, which human power cannot effect and certainly that which produces this must be better than man. What can this be but **God?**"

—*Marcus T. Cicero.*

# கோயில்கள் வளர்ந்த கதை

திரு. ஏ. வி. ஜெயச்சந்திரன், M.A., B.L., சென்னை

தென்னகத்துக் கோயில்கள் உலகப் புகழ் பெற்றவை. புராதனமானவை. உரோம் கிரேக்கம் எகிப்தம் போன்ற பழம்பெரும் நாடுகளில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பல கோயில்கள் இருந்தன. அவைகளில் சிறப்புற்ற வழிபாடுகள் நடைபெற்றன. மக்களும், மன்னர்களும் வழிபாடுகளிலும் அங்கு நடைபெற்ற விழாக்களிலும் ஈடுபட்டு வந்தனர். அப்பழம் பெரும் நாடுகளில் இருந்த கோயில்கள் பல. எல்லாம், காலப்போக்கில் அழிவுற்றன. எஞ்சியுள்ள சில, அருங் காட்சி அகமாக நிலவுகின்றன. தென்னகத்திலோ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட பல கோயில்கள் இன்றும் வழிபாட்டில் இருக்கின்றன. மக்கள் ஆர்வத்துடன் அக்கோயில்களுக்குச் சென்று வழிபடுகின்றனர். விழாக்கள் யாவும் இன்றும் நடைபெறுகின்றன. சங்க காலத்தில் மக்கள் என்ன காரணங்களுக்காகக் கோயில் வழிபாடு மேற்கொண்னரோ அதே காரணங்களுக்காக இன்றும் மக்கள் கோயிலுக்குச் சென்று வழிபடுகின்றனர். தொடர்ந்து ஈராயிரம் ஆண்டுகள் வளம் குன்றாத கோயிற் பாரம்பரியத்தினைப் பொதுவாகப் பாரதத்திலும், குறிப்பாகத் தென்னகத்திலும், சிறப்பாகத் தமிழ்நாட்டிலும்தான் காண இயலும்.

## தொடர்ந்த பாரம்பரியம் :

இப்படி தொடர்ந்து வழக்கில் இருந்து வரும் பாரம்பரியத்தினையும், அதனால் சமுதாயத்திற்கு ஏற்படும் பலன்களையும் கண்டு, மேற்கத்திய நாட்டினர் வியப்புறுகின்றனர். இந்தப் பாரம்பரியத்தில் குறைபாடுகள் இல்லை எனத் தெளிவாகக் கூறமுடியாவிடினும், அதனால் விளையும் பல நன்மைகளை நோக்குமிடத்து, அதன் தொடர்ச்சியில் நாம் அதிக அக்கரை காட்ட வேண்டியுள்ளது. வழிபாட்டிற்காக மட்டும் ஏற்பட்ட கோயில்கள், கால அளவிலே சமயங்களினைக் காப்பதோடு நில்லாமல், கலைக்கூடங்களாகவும், கலாசாலைகளாகவும், உடல் உள்ள நோய் உற்றோருக்குப் புகலிடமாகவும், வெள்ளம் முதலிய இயற்கையின் கொடுமையால் மக்கள் தாக்குண்டவிடத்து ஒதுங்குமிடமாகவும், வேலையில்லோருக்கு வேலை அளிக்கும் தலமாகவும், பசியினால் வாடும் ஏழை எளியவர்களுக்கு அன்னம் பாலிக்கும் தாயகமாகவும் விளங்கின.

சங்க காலத்தில், சிறியதாக அமைந்த ஆலயங்கள், காலப்போக்கில் வளர்ச்சியுற்று, மதுரை திருவரங்கம் திருவானைக்கா திருவண்ணாமலை திருநெல்வேலி போன்ற பெரும் கோயில்களாக வளர்ச்சி பெற்றன. இக்கோயில்களின் வளர்ச்சியினைப் பல முனைகளில் ஆய்வு செய்தாலொழிய, அவற்றின் சிறப்பினை உணர முடியாது. ஏனெனில், வரலாற்று ஆசிரியர்கள் கோயில்களின் கட்டிடப் படிம அமைப்புகளின் போக்கைக் கொண்டு மட்டும் ஆய்வு செய்து, கோயில்கள் இன்ன காலத்தில் அமைந்தவை என முடிவு கட்டி நிறைவு பெறுகின்றனர். அந்த ஆய்வினால் கோயில் பாரம்பரியத்தின் உட்பொருளை உணரமுடியவில்லை. ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முந்தியதாக அமைந்த மாமல்லபுரத்துக் கடற்கரைக்கோயில், இன்று காட்சி அகமாக அமைகின்றது. அதே சமயத்தில் சில ஆண்டுகட்கு முன்பே, உருவாகிய கருமாரியம்மன் ஆலயத்திற்குப் பல லட்சக் கணக்கில் மக்கள் சென்று வழிபடுகின்றனர். இதற்குக் காரணம் கண்டு கொள்ள வேண்டும். கருமாரியம்மன் கோவிலுக்கு அருகே அமைந்து 7-ஆம் நூற்றாண்டில் ஞானசம்பந்தர் பெருமானால் பாடல்பெற்ற திருவேற்காடு ஆலயம் இன்றும் சிறப்புற்று இருக்கிறது. அதற்கும் காரணம் என்ன?

ஆகவே, வரலாற்று அடிப்படையில் மட்டும் ஆய்வு செய்யாமல், வழிபாடு அமைப்பிலும் கோயில் வளர்ச்சியினைக்கண்டு கொள்ள வேண்டியுள்ளது. வழிபாட்டு முறைகளை ஆகமங்கள் தொகுத்துக் கூறுகின்றன. ஆகம முறைகளினின்று வழுவாது வழிபாடுகள் நடைபெறும் கோயில்களில் மக்களை ஈர்க்கும் சக்தி அதிகமாக இருப்பதைப் பார்க்கிறோம். ஒரு நாளைக்கு எட்டுமுறை பூசைகள் நடைபெறுவது உத்தம உத்தமம் என்றும், ஏழுமுறை பூசைகள் நடைபெறுதல் உத்தம மத்திமம் என்றும், ஆறு முறை பூசைகள் அமைவது உத்தம அதமம் என்றும், ஐந்து முறை பூசைகள் பெறுவது மத்தியம உத்தமம் என்றும், நான்கு முறை பூசைகள் ஆற்றுதல் மத்தியம் மத்திய மென்றும், மூன்று முறை மத்தியம அதமமென்றும், இரு முறை அதம உத்தம மென்றும், பூசையேயில்லாது இருப்பது அதம அதமமென்றும், ஆதமங்கள் கூறுகின்றன. எட்டுமுறை பூசைகள் நடைபெறும் கோயில்களில் விளக்கவொண்ணாத ஒரு ஒளி திகழ்வது கண்கூடு. இந்தப் பூசைகள் யாவும் சங்க காலம் தொட்டு எப்படி அமைந்தன என்று, ஆய்வு செய்து கொண்டால் பல உண்மைகளை நம்மால் உணர முடியும்.

ஆகம பூசைகளால் மட்டும் கோயில்கள் சிறப்பு பெறுவதும் இல்லை. எடுத்துக் காட்டாக மாங் காடு காமாட்சியம்மன் ஆலயத்தினைப் பார்ப் போம். இக்கோயில் கருவறையில் இருப்பது மேரு. இங்கு உருவத்திருமேனி பிரதிட்டை செய்யப்படவில்லை. ஐம்பொன் உற்சவத் திரு மேனியினை மேருவுக்குப் பின் வைத்துள்ளனர். மேருவைத்தான் கருவறையில் பிரதிட்டை செய்துள்ளனர். இக்கோயிலில் நடைபெறுவது ஆகம அடிப்படையில் அமைந்த பூசைகள் அல்ல. ஆயினும், மக்கள் வெள்ளம் திரள் திரளாகச் சென்று வழிபட்டு நிறைவு பெறுகின் றனர். இதற்குரிய காரணத்தினைத் தத்துவ அடிப்படையில் சீர்தூக்கிக் காண வேண்டும்.

## மூன்று அணுகு முறைகள் :

சுருங்கக் கூறுவதாயின், ஒரு கோயிலைத் துருவி ஆய்வு செய்ய, மூன்று அணுகு முறை களை மேற்கொள்ள வேண்டும். அவை: (1) வர லாற்று அடிப்படை, (2) வழிபாட்டு அடிப் படை, (3) தத்துவ அடிப்படை. அடிப்படை யினை வகுப்பதானல், கோயில்களைத் தொகுத்து, சில வரலாற்று அடிப்படையிலும், சில வழி பாட்டு அடிப்படையிலும், சில தத்துவ அடிப் படையிலும், ஆய்வு செய்ய வேண்டும் என்ப தில்லை. பெரிய கோயில்களினை மூன்று அடிப் படைகளிலும் காண வேண்டியிருக்கும். மதுரை ஆலவாய்ச் சொக்கனின் ஆலயம், பரிபாடல், சிலப்பதிகாரம், மதுரைக் காஞ்சி போன்ற நூல் களில் குறிப்பிடப்படுகிறது. பரிபாடல், அக் கோயில் நகரத்தின் மையத்தில் அமைந்துள்ள தாகவும், வைகறையில் அங்கு முழங்கும் வேத ஒலிகளால் நகர மக்கள் எழுந்தனர் என்றும் குறிப்பிடுகிறது. வரலாற்றுப் பாணியில் மதுரைக் கோயில் கட்டிட அமைப்பினையும் கலைவளர்ச்சியினையும் 12-ஆம் நூற்றுண்டி லிருந்து காண முடியும். வழிபாட்டுச் சிறப்புக் களைக் கூறக் கல்வெட்டுகளில் சில குறிப்புகள் உள. மதுரைக் காஞ்சி, அங்கு நடைபெற்ற விழாவினைப் பற்றிப் பகருகிறது. தமிழ்விடுதூது மதுரைச் சொக்கநாதர் உலா போன்ற பல இலக்கியங்கள் மதுரை விழாக்களின் சிறப்புக் களையும், பூசை முதலியவைகளின் அமைப்புக் களையும் அலசுகின்றன. கல்வெட்டுக்களினின்று பூசைகளின் பாங்கினையும் இசை நிகழ்ந்த வரலாறுகளைப் பற்றியும் அறிகிறோம். தத்துவ அமைப்பில் உருவாகிய மதுரைக் கோயிலைப் பற்றிப் புராணங்கள் கூறுகின்றன. ஆலவாய்க் கோயிலை இந்திரன் தாபித்ததாக, பெரும் பற்றப்புலியூர் நம்பி, பரஞ்சோதியார் ஆகியோர் இயற்றின திருவிளையாடற் புராணங்கள் கூறு கின்றன. இந்த வரலாறு ஒரு தத்துவ அடிப் படையில் எழுந்த ஒரு கதை. இந்திரன் என்ற சொல் பலபொருள் கொண்ட ஒரு சொற்கிளவி. இந்திரம் என்ற சொல் கடம்ப மரத்தினையும், தேகத்தில் வசிக்கின்ற சித்தினையும், இந்திர விழாவினையும், மேன்மை, உசிதம் என்ற பொருள்களையும் குறிப்பிடும். மேலும் இந்திரன் எட்டு திக்கு யானைகளை வரவழைத்து விமானத் தினைத் தாங்கச் செய்தான் என்ற புராணக்குறிப் பும் சிந்திக்கத்தக்கது. அட்டயானைகளுக்குத் தனித்தனியே திக்குகள் உண்டு. மதுரை ஆல யத்து விமானத்தில் அந்த யானைகளின் அமைப் பினைப் பார்க்கும்போது, முன்னொரு காலத்தில் நான்கு திக்குகளிலும், வாயில்கள் இருந்திருக்க வேண்டும் என்றும், அந்த வாயில்களைக் காக் கும் யானைகள் தாம் இவை என்றும், யூகிக்க முடியும். இப்படியமைந்த கோயில்களினைச் சர்வதோபத்ர ஆலயம் என ஆகமங்களும், சிற்ப சாத்திரங்களும் பகரும். இதைப் போன்ற ஆலய அமைப்புதான் முதன் முதல் தோன்றிய ஆலயங்களின் அமைப்பும்கூட. இந்த நான்கு வாயில்களைச் சாந்தி துவாரம் என்றும் வித்யாதுவாரம் என்றும், நிவிருத்தி துவாரம் என்றும், பிரதிஷ்டாதுவாரம் என்றும் அழைப் பர். இவைகள் முறையே கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு திக்குகளில் அமையும். மேலும், கடம்பவனத்தில் ஆலயம் உள்ளது. கடம்ப வனத்திற்கு ''இந்திரம்'' என்று மற்றொரு பெயர் எனக் கண்டோம். சித்திரையின்போது தான் மேஷ ராசியில் சூரியன் பிரவேசிக்கின் றான். இம்மாதப் பௌர்ணமியின்போது கொண் டாடப்படும் இந்திர விழா தமிழ் நாட்டில் சங்க காலத்தில் கொண்டாடிய விழாக்களில் தலை சிறந்தது. இன்றும் மதுரைக் கோயிலில் சித்ரா பௌர்ணமியின்போது இந்திரன் பூசித்த வர லாறு விழாவாகக் கொண்டாடப்படுகிறது. நுழை வாயிலில் இருபக்கங்களிலும் உள்ள யானைகள் சுப்ரதீபம் என்றும், ஐராவதம் என் றும் பெயர் பெறும். சுப்ரதீபம் வடகிழக்கு திக்கிற்கும், ஐராவதம் கிழக்குத் திக்கிற்கும் உரியவை. நுழைவாயில் வடகிழக்கிற்கும் கிழக்கிற்கும் ஊடே அமைவது ஆகமமுறை. இவையாவற்றினையும் ஒன்று திரட்டி மனதில் வைத்துப் புராணக் கதையினைப் பார்த்தால், கோயில் அமைப்பின் மறை பொருள் விளங்கும். ஆக, மதுரைக் கோயில் வரலாற்று வழிபாட்டு தத்துவ அடிப்படைகளில் காண வேண்டிய ஒரு கோயிலாகும். மதுரைக்கோயிலிலும் மற்றும் பல கோயில்களிலும் பல தத்துவங்கள் பொதிந்து கிடக்கின்றன. இவையாவும் தொடர்பாக இக் கட்டுரைகளில் காணலாம்.

## ஒருமித்த சமய, கடவுள் கொள்கைகள் :

தென்னகக் கோயில் வளர்ச்சி தனிப்பட்ட தன்று. பாரத நாட்டின் பல்வேறு பகுதியில் ஏற்பட்ட கோயில்களின் வளர்ச்சியோடு தொடர்பு கொண்டது. ஆயினும், அவைகளில் காணுத சில தனிச் சிறப்புகளும் கொண்டது. பாரதமெங்கும் 2,000 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு மரபு வழக்கிலிருந்ததை உணர்கிறோம். சமயக் கொள்கைகளிலும், தெய்வக் கொள்கை களிலும் கோயில் அமைப்புக் கொள்கைகளிலும் ஒருமித்த கருத்துக்கள் வழக்கில் இருந்திருக்க வேண்டும். இக் கருத்துக்களை விளக்குவதற்குப் பொதுவாக ஒரு மொழி, சில சொற்கள் பயன் படுத்தியிருக்கலாமெனவும், நினைக்க இடமுண்டு கி. மு. 3-ஆம் நூற்றுண்டினைச் சார்ந்த கல் வெட்டுகளில், தமிழ்மொழி, பிராமி எழுத்துக் களில் எழுதி வந்தது தெளிவாகிறது.

கடவுட் கொள்கையினை விளக்கும் தொல்

காப்பியப் பகுதிகளில் இருவேறு கடவுள் நிலையினைக் காண்கிருேம். ''வினையின் நீங்கி விளங்கிய'' ஒன்றினைக் கடவுளாகவும், ''வழிபடு தெய்வ'' மாகவும் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகிருர். கடவுள் எனச் சுட்டிக் காட்டுவதைத்தான் திருவாய்மொழியில் ''யாவையும் எவரும் தானுய் அவரவர் சமயந்தோறும் தோய்விலன் புலன் ஐந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி என்று விளக்குகிருர். புலன் கடந்த நிலையில் உணர்வாக அனுபவிக்கும் இறைநிலை இங்கு விளக்கப்படுகிறது. இதனை 'நிர்குணப் பிரம்மம்' என்று கருதலாம். வழிபாட்டிற்காகப் புறத்தே நிறுத்தி வாழ்த்தும் இறைநிலையினைத் தெய்வம் என அழைத்தனர். இது சகுணப்பிரமமாகும். இது குணத்தொடு கூடியது. வழிபாடு செய்பவருக்கு நன்மைகளைச் செய்வது. ஆகம வழிபாட்டின் வித்தினைத் தொல்காப்பியத்தில் காணுகிருேம். இந்த தெய்வத்தினைத்தான் தினந்தோறும் வழிபட்டனர். மேலும் இந்த தெய்வங்கள் உறைந்த இடங்கள் பலவாகச் சங்கநூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. ''ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும், கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும் அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்.'' ஆலமரத்தின் நிழலிலும். கடம்பின் அடியிலும் ஆறுகளின் பகுதியிலும், குன்றின் மீதும் தெய்வங்களை வழிபட்டனர். ஆலமரத்தில் தெய்வம் இருந்ததுபற்றிப் புறநானூறு(199-1)கூறுகிறது. திருமுருகாற்றுப்படையில் தெய்வம் தங்கும் இடங்களினைக் காணுகிருேம்.

ஆலயங்களின் கட்டட அமைப்பு, அதனை மையமாக வைத்து வளர்ந்த கலைகளைப் பற்றிச் சில மரபுச் சொற்கள் விளங்கின. இச்சொற்கள் வடமொழிச் சொற்களாகத் தோற்றமளிக்கின்றன. எந்த மொழியினின்று வடமொழியில் இச் சொற்களை மேற்கொண்டனர் என்பது ஆய்வு செய்ய வேண்டிய ஒருபொருள். இச் சொற்களை எல்லா மொழியினரும் பின்பற்றினர். எடுத்துக் காட்டாக ''கோட்டம்'' என்ற சொல்லினைப் பார்ப்போம். கோட்டம் என்ற சொல்லின் வடமொழித் தோற்றம் 'கோஷ்டம்' ஆகும். இது நீண்ட சதுர அமைப்பில் உருவாகிய ஒரு கோயில் அமைப்பினைக்குறிக்கும். தேவியர் கோயில்கள் பண்டைக் காலத்தில் நீண்ட சதுர வடிவில் அமைந்தவை. ஆகவே 'காமக்கோட்டம்' என்பது தேவியின் கோயிலைக் குறிக்கும் சொல்லாக அமைந்தது. 'இட்டிகை' என்ற சொல்லின் வடமொழித் தோற்றம் 'இஷ்டிகா' என்று. கோயில், வேள்வித்தீ, போன்றவை அமைக்கப் பயன்படும் செங்கல்லுக்கு இந்தப் பெயர் சூட்டினர். இட்டிகை நெடுஞ் சுவரால் உருவாகிக் கிலமாகக் கிடந்த கோயிலைச் சித்தரித்துக் காட்டுகிறது அகநானூறு. இந்த மரபுச் சொற்களைப் பற்றிப் பிறகு சிந்திப்போம்.

---

# சிதம்பரம் நடராசர் திருக்கோயில்

உலகெங்கணும் உள்ள அறிவியல் (Science) அழகியல் (Aesthetics) முதலிய கலைப்பேரறிஞர்கள் அனைவராலும், கண்டு களித்துக் கொண்டாடப் பெறுவது, நடராசப் பெருமானின் அற்புதத் திருவுருவம்! அப்பெருமான் எழுந்தருளித் திருக்கோயில் கொண்டு விளங்கும் திருத்தலம், சிதம்பரம். நடராசப் பெருமானுக்குரிய ஐந்து சபைகளுள், திருவாலங்காடு இரத்தின சபை; மதுரை இரசிதசபை (வெள்ளியம்பலம்); திருநெல்வேலி தாமிரசபை; திருக்குற்ருலம் சித்திரசபை; சிதம்பரம் கனகசபை (பொன்னம்பலம்) எனப்படும்.

இவைகளே யன்றி, சிதம்பரத்திலேயே கூட, நடராசப் பெருமானுக்கு ஐந்து சபைகள் உண்டு. நடராசப் பெருமான் இருக்கும் இடம் சிற்சபை; ஆயிரங்கால் மண்டபம் இராச சபை; சிற்சபைக்கு முன்னுல் உள்ளது கனகசபை; கொடி மரத்திற்கு அருகில் உள்ளது நிருத்தசபை;

இங்குக் கனகசபையைச் சுற்றியுள்ள பிராகாரம், விக்கிரம சோழன் திருமாளிகை; திருமூலட்டானத்தைச் சேர வருகின்ற இரண்டாம் பிராகாரம், குலோத்துங்க சோழன் திருமாளிகை; அதற்கு அடுத்துள்ள மூன்ரும் பிராகாரம், இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என வழங்கும்.

சிதம்பரம் நடராசர் திருக்கோயில், உலகமாகிய அண்டம் (Macrocosm) நம் உடம்பு ஆகிய பிண்டம் (Microcosm) என்னும் இரண்டின் நுட்பங்களை உணர்த்தும் நிலையில் அமைந்துள்ளது என்பர் பெரியோர்! இவ்வண்டத்தின் ஒருபகுதி, நமது பரதகண்டம். அதில் உள்ள இலங்கைக்கும், இமயத்திற்கும் இடையில் உள்ளது சிதம்பரம். இலங்கை இடைகலை, இமயம் பிங்கலை, சிதம்பரம் சுழுமுனை (நடுநாடி). இங்குள்ள நான்கு கோபுரங்கள், நான்கு வேதங்கள்; ஆயிரங்கால் மண்டபம், சகஸ்ராரம் என்னும் ஆயிரம் இதழ்த் தாமரை; சிவகங்கைத் தீர்த்தம், சகஸ்ராரத்தை அடுத்துள்ள அமிழ்தவாவி; நான்கு தம்பங்கள், நான்மறைத் தேவதைகள்; அவற்றைச் சார்ந்துள்ள 28 நெடுமரத் தம்பங்கள், 28 ஆகமங்கள். 96 பலகணிகள், 96 தத்துவங்கள். விமானத்தின் 9 கலசங்கள், 9 சத்திகள். விமானத்தின் 64 கழிகள், 64 கலைகள். கனகசபையின் பொன் ஓடுகள் 21690. அவைகள் நாம் நாள்தோறும் விடுகின்ற 21600 மூச்சுக்காற்றினைக் குறிக்கும். அவற்றில் அடித்துள்ள ஆணிகள் 72,000. அவைகள் நம் உடலின்கண் உள்ள 72,000 நாடி நரம்புகளைப் புலப்படுத்துகின்றன. மற்றும் இங்குள்ள இராச சபை தேவசபை கனகசபை நிருத்தசபை சிற்சபை என்னும் ஐந்தும், நமது தூலவுடல் சூக்குமவுடல் குணவுடல் கஞ்சுகவுடல் காரணவுடல் என்னும் ஐந்தையும் சுட்டுகின்றன. இங்ஙனம் பற்பல தத்துவ நுட்பங்களை யுணர்த்தும் வகையில், சிதம்பரம் நடராசர் திருக்கோயில் அமைந்துள்ளது எனப் பெரியோர்கள் கூறுவர்!.

—ந. ரா. முருகவேள்.

# நீர் வண்ணன்

மகாவித்துவான், பத்மவிபூஷண்
திரு பி. ப. அண்ணங்கராசார்ய சுவாமிகள்
காஞ்சிபுரம்

எம்பெருமான் திருநீர்மலையிலே நீர்வண்ணன் என்றும், கச்சியூரகத்தில் நீரகத்தான் என்றும் திருநாமம் பெற்றிருப்பது பிரசித்தம். நீர்க்கும் எம்பெருமானுக்கும் ஒப்புமை பலபடிகளால் உண்டு.

(1) நீர் பள்ளத்தில்தான் பாயும், மேட்டில் ஏறுவது அருமை. எம்பெருமானும் சாதி முதலியவற்றால் குறைந்தாரிடத்தே எளிதாகச் செல்லுவன்; உயர்ந்தோம் என்று மார்பு நெறித்திருப்பாரிடத்தே செல்ல விரும்பான். பாண்டவர்கட்காகத் தூது எழுந்தருளும்போது ஞானத்தால் சிறந்தோம் என்றிருக்கும் துரோணாசாரியரையும், செல்வத்தால் சிறந்தோம் என்றிருக்கும் துரியோதனனையும் ஒரு பொருளாக மதியாதே, இவையெல்லாவற்றாலும் தாழ்ந்தவராகத் தம்மை நினைத்திருந்த விதுரருடைய திருமாளிகையிலே தானாகவே சென்று, ''முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ, பன்னகாதிபப் பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ? கருதி நீ எய்துதற்கு என்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடில் என்றான்' (வில்லிபாரதம்) என்று அவர் உள் குழையுமாறு இருந்து அமுது செய்தருளினான் கண்ணபிரான்; ஆகவே பள்ளத்தே ஓடிப் பெருங்குழியிலே தங்கும் இயல்பு, நீருக்கும் எம்பெருமானுக்கும் ஒக்கும்.

(2) நீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது; அப்படியே எம்பெருமான் இன்றி ஒரு காரியமும் ஆகாது. ''லோகாபிந்நருசி'' என்கிறபடியே ஒருவன் விரும்பினதை மற்றொருவன் விரும்பாதபடி உலகம் வெவ்வேறு விருப்பத்தை உடையதாயினும், எல்லோரும் நீரை விரும்பியேயாகவேண்டும்; அதுபோலவே எம்பெருமானும்.

(3) நீர்க்குக் குளிர்ச்சி இயற்கை; சூடு வந்தேறி; எம்பெருமானுக்கும் தண்ணளி இயற்கையாய்ச் சீற்றம் வந்தேறியா யிருக்கும். ''நீரிலே நெருப்புக் கிளருமா போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால்'' என்ற முமுட்சுப்படித் திவ்விய சூக்தி காண்க.

(4) நீர் சுட்டாலும் அதை ஆற்றுவதற்கு நீரே வேணும்; எம்பெருமான் சீறினாலும் அவனாலே தெளிவு பெறவேணும். ''தருதுயரந்தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை'' என்றார் குலசேகரப் பெருமான்.

(5) நீர் நம் விருப்பப்படி தேக்கி வைக்கவும் ஓடவிடவும் உரியதாயிருக்கும். எம்பெருமான் படியும் அப்படியே. ஆண்டாள் தான் சூடிக் களைந்த மாலையிலே விலங்கிட்டு வைத்து அநுபவிக்க நின்றான் எம்பெருமான். பாண்டவர்கட்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது போகவிடப் பெற்றான். ஆண்டாள் தேக்கி வைத்தனள், பாண்டவர்கள் ஓடவிட்டனர்.

(6) நீரானது மற்ற பண்டங்களைச் சமைப்பதற்குக் கருவியாயிருக்கும். தனிப்படத் தானே குடிக்கத் தக்கதுமாய் இருக்கும். எம்பெருமானுக்கும் உபாயத்துவம் உபேயத்துவம் என்ற இரண்டு ஆகாரங்களுண்டே. எம்பெருமானைக் கொண்டு வேறு பலன்களைப் பெற விரும்புவாரும், எம்பெருமான் தன்னையே சுவயம் புருஷார்த்தமாகக் கொள்வாரும் உள்ளமை காண்க.

(7) சோறுமுதலானவை தமக்குப் பிரதிநிதிகளைப் பொறுக்கும். அதாவது காய் கனி கிழங்கு வேர் பால் முதலியவற்றால் தேகதாரணம் பண்ணலாம். பண்ணுவாருமுளர். நீரானது அப்படி பிரதிநிதி ஒன்றையும் சகிக்க மாட்டாது. நீர்க்கு நீரே வேணும். அப்படியே எம்பெருமானுக்கும் பிரதிநிதி கிடையாது; குணாநுசந்தாநத்தாலும் போது போக்கவரிது. ''ஒருநாள் காணவாராயே'' ''அடியேன் தொழ வந்தருளே'' என்று பிரார்த்தித்துப் பெற்றே தீரவேண்டும். உணவுப் பொருள்களில் அரிசிக்குப் பதிலாகக் கோதுமையோ பாலோ மற்றும் எந்தப் பொருளோ அவரவர்களின் சுவைக்கு ஏற்றபடி வைத்துக் கொள்ளப்படுவதுண்டு. ஆனாலும் நீருக்குப் பதிலாக வேறெதுவும் வைத்துக் கொள்ளப்படுவதில்லை; நீர் ஒருவராலும் விடமுடியாதது. அதுபோல கர்ம ஞான பக்தி பிரபத்தி முதலியவற்றில் எதைவிட்டு எதைப்பற்றினாலும், எம்பெருமான் ஒருபடியாலும் விடத்தகாதவன் என்ற

தாயிற்று. இது மிக நுட்பமான தத்துவப் பொருள்.

(8) சோறு உண்ணும்போது நீர் இல்லாமல் முடியாது. அப்படி நீர் வேறொன்றை வேண்டி நிற்பதன்று. எம்பெருமான் படியும் அப்படியே. உபாயாந்தரங்களுக்கு எம்பெருமான் வேணும்; எம்பெருமான் இதர நிரபேஷக் (அதாவது) எதையும் எதிர்பாராதவன் ''உன்னலல்லால் யாவராலுமொன்றுங் குறை வேண்டேன்'' என்றாரே நம்மாழ்வார்.

(9) கொள்ளும் பாத்திரங்களின் தாரதம்மியமேயன்றி நீர்தான் குறைய நில்லாது; எங்கும் நிரம்பவல்லது. எம்பெருமானும் ''வேண்டிற்றெல்லாந் தருங்கோதில் வள்ளல் என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி எங்கும் நிரம்பவல்லவன். கொள்வார் குறையே யத்தனை: ஐசுவரியமே போதுமென்பாரும், கைவல்யமே போதும் என்பாருமாகக் குறையக் கொள்ளுவாருடைய குற்றமே. அற்பமான ஐசுவரியம், உத்தமமான முத்தியளவும் எதையும் அளித்து நிரப்ப வல்லவன் இறைவன்.

(10) நீர் ஐவகைப்பட்டிருத்தல் போல எம்பெருமானும் ஐவகைப்பட்டிருப்பன் எங்ஙனமெனில், (1) பூமிக்குள்ளே பதிந்து கிடக்கின்ற நீர். (2) அண்டத்துக்குப் புறத்தேயுள்ளநீர். (3) பாற்கடல் நீர் (4) பெருக்காற்றுநீர். (5) தடாகங்களில் தேங்கும்நீர் என, நீர் ஐவகைப்படும். விடாய்த்தவனுக்கு வேறொரிடம் தேடிப் போக வேண்டாதபடி நிற்கிறவிடத்திலேயே உண்டாயிருக்கச் செய்தேயும் கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினல் அல்லது குடிக்கக் கிடையாத பூமிக்குள் பதிந்து நீர்போலயாய்த்து அந்தர்யாமித்வம்; கண்டு பற்ற இருதயத்திலே இருக்கச் செய்தேயும் கண்ணுக்குப் புலப்படாமல், அட்டாங்க யோகமாகிற முயற்சியாலே, காணவேண்டும்படியானது அன்றோ இது. (2) விடாய்த்தவனுக்கு, அண்டத்துக்கு வெளியே பெருகிக் கிடக்கிற ஆவரண சலம் போலேயாயிற்று. கண்டு பற்றவேணும் என்றிருக்கிறவனுக்கு லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்துவம். (3) அப்படி அதிதூரத்திலும் அன்றியே அண்டத்துக்கு உட்பட்டிருக்கச் செய்தேயும் விடாய்த்தவனுக்குக் கிட்ட அரிதான பாற்கடல்போலேயாயிற்று. சென்று காண அரிதாம்படி இருக்கிற வியூகம். (4) அருகேயிருந்தும் தற்காலத்திலிருந்தவர்களுக்கு மட்டும் உபயோக யோக்யமாய்ப் பிற்பட்டவனுக்கு அரிதான பெருக்காறு போலேயாயிற்று. இராமகிருஷ்ணாதி அவதாரங்களான விபவம். பூமியிலே அவதரித்துச் சஞ்சரித்தும் தற்காலத்திலிருந்தவர்களுக்கே அடையத் தக்கதாய்ப் பிற்காலத்திலுள்ளவர்களுக்குக் கிட்டாதபடியாய் இருப்பதன்றோ இது. (5) விடாய்த்தவனுக்கு விடாய் தீரப் பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாயிற்று கோயில்களிலும் இல்லங்களிலும் எங்கும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற அர்ச்சாவதாரம். ஆக இந்த ஐந்து வகைகளிலும் ஐவகை நீரை ஒத்திருப்பான் எம்பெருமான்.

(11) நீரானது இயற்கையிலே பரிசுத்தமாயினும், ஆதரவசத்தாலே கொள்ளத்தக்கதும் தள்ளத்தக்கதுமாகிறது. அப்படியே பிற தெய்வங்களில் அந்தர்யாமியான எம்பெருமான் உபேட்சிக்கத்தக்கவனுகவும், சுடராழி வெண் சங்கேந்தின எம்பெருமான் உத்தேசியனுகவும் உள்ளமை காண்க.

(12) தோண்டத் தோண்டச் சுரக்கும் நீர்; எம்பெருமானும் கொள்ளமாளா வின்ப வெள்ளமாய்ப் பேசப்பேச வளர்ந்திடுவன். ''செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லுங் கீர்த்தியாய்'' என்றாரே நம்மாழ்வார்: ''பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே வாச மலர்த்தண்டுழாய் மார்வன்-வடிவு'' என்றார் பேயாழ்வாரும்.

(13) நீர் தனக்கொரு பிரயோசனமும் இன்றிப் பரார்த்தமாகவேயிருக்கும்; அதுபோல எம்பெருமானுடைய இயல்பு ரூபம் குணம் விபூதிகள் ஆகியனவெல்லாம் நம்போன்ற அடியார்களுக்காகவே யிருக்கும்.

(14) நீர் தானே பெய்யவேணுமேயன்றி ஒருவரால் வடிம்பிட்டுப் பெய்விக்க முடியாதது; எம்பெருமான் படியும் இப்படியே; அவன் தனது இயற்கை இன்னருளால் இரங்கினல்தான் உண்டு.

(15) நீர் கடலிலிருந்து காளமேகம் வழியாக வந்தாலன்றி உபசீவிக்க உரியதாகாது. எம்பெருமானும் சாத்திரங்களில் இருந்து ஆசாரியர் முகமாக வந்தே உபசீவனுகிறான். ''மேகம் பருகின சமுத்திராம்பு போல நூற்கடற் சொல் இவர் வாயனவாய்த் திருந்தின வாறே ஸர்வதா ஸர்வோப ஜீவ்யமாமே'' என்ற ஆசார்ய இருதய சூக்தி காண்க.

(16) சிறியார் பெரியார் என்கிற விபாகமின்றியே அனைவரும் ஓர் துறையிலே படிந்து குடைந்தாடலாம்படி இருக்கும் நீர்; எம்பெருமானும் நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே'' என்றும், ''கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்'' என்றும் சொல்லுகிறபடியே, பெரியார் சிறியார் என்னும் வாசியற ஒக்க வழிபடலாம் படியிருப்பன்.

(17) நீர் சிறிது துவாரம் கிடைத்தாலும் உட்புகுந்துவிடும். எம்பெருமானுக்கும் சிறிது காரணமே போதும்; ''திருமாலிருஞ் சோலைமலை என்றேன் என்னத் திருமால் வந்தென்னெஞ்சு நிறையப் புகுந்தான்'' என்றும், ''மாதவன் என்றதே கொண்டு என்னுள் புகுந்திருந்தான்'' என்றும் அருளிச் செய்தார் நம்மாழ்வார்.

(18) கங்கை, காவிரி, திரிவேணி முதலான தீர்த்த விசேடங்களிலே நீருக்குப் பெருமை அதிகம்; எம்பெருமானுக்கும் கோயில் திருமலைப் பெருமாள் கோயில் முதலான திருப்பதிகளிலே சிறப்புப் பொலியும்.

(19) தாபம் மிக்கவர்கள் நீரை முகத்திலே ஏறட்டுவது முதுகில் கொட்டுவது உள்ளில்

இழிச்சுவது, படிந்து குடைந்தாடுவதுபோல், ''வாக்கினல் கருமந்தன்னல் மனத்தினல், சிரத்தை தன்னல், வேட்கை மீதூர வாங்கி விழுங்குவர்கள்'' எம்பெருமானையும் என்கிருர் திருமங்கையாழ்வார்.

(20) நீர் வேண்டியவன், ஒரு துளி நாக்கு நனைக்கக் கிடைத்தால் போதுமென்பன்; ''கூரா ராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே'' என் றும், ''ஒருநாள் காணவாராயே'' என்றும், ''நம்மையொருகால் காட்டி நடந்தால் நாங் களுய்யோமோ'' என்றும் ஆழ்வார்கள் கூறுவர் எம்பெருமானை நோக்கி.

(21) நீரில் சிறிய கல்லும் அமிழும், பெரிய தெப்பமரமும் மிதக்கும். எம்பெரு மான் பக்கலிலும் பிரமாவாய் இழந்துபோதல் இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யக் காணு நின்ரேமிறே என்கிறபடியே பெரியார் இழக்க வும் சிறியார் பெறவுமாகும். ''நேரே கடிக்க மலத்துள்ளிருந்துங் காண்கிலான், கண்ண னடிக் கமலந்தன்னை அயன்'' என்று பிரமன் இழந்ததைப் பொய்கையார் கூறினர். ''மருவு நின் திருநெற்றியில் சுட்டியசைதா மணிவா யிடை முத்தந் தருதலும், உன்றன் தாதையைப் போலும் வடிவு கொண்டு உள்ளம் உள் குளிர விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து வெகுளி யாய் நின்றுரைக்கும் அவ்வுரையும் திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்ருளே'' என்று இடைச்சி பெற் றதைக் குலசேகராழ்வார் கூறினர். பகவத் குணங்களில் சிறுமாமனிசர் அமிழ்தலும், ஊன் மல்கிமோடு பருப்பார் வாய்க் கரையில் நிற்ற லுங் கொள்க.

(22) ''துப்பார்க்குத் துப்பாய துப் பாக்கித் துப்பார்க்குத், துப்பாய தூஉம் மழை'' (திருக்குறள்) என்றபடியே உணவு பெருக விளை தற்குக் காரணமாகையாலே தானே போக்ய மாயும் இருக்கும் நீர். உபாயமும் தானய் உபேயமும் தானயிருப்பன் எம்பெருமான் என் பது நூற் கொள்கை. இங்ஙனே காண்க. **

---

## கடவுள் இல்லையா ? எங்ஙனம் கூறஇயலும் ?

'கடவுள் இல்லை' என்று சொல்லுவதை, ஒரு சிலர் தமக்கே யுரிய நாகரிகப் பாங்காகவும் முற்போக்கு நெறிக் கொள்கையாகவும் கருதிக் கொண்டு, கடைப்பிடித்தொழுகுவதை நாம் காண்கின்ரேம். கடவுளின் பெயரால் போலிக் கயவர்கள் சிலர் உலகிற் புரிந்துவரும் பலவகை முறைகேடுகளையும், தீச் செயல்களையும் கண்டு அறிந்து அருவருப்பு அடைபவர்கள், அதன் விளைவாகக் கடவுள் மறுப்புக் கொள்கையினை மேற்கொள்ளத் தலைப்படுகின்றனர்.

கடவுளை நம்பாமையினலேயே, ஒருவன் பகுத்தறிவாளனகவும், முற்போக்கு நெறியாள னகவும், சீர்திருத்தக் காரனகவும், ஒழுக்க சீலனகவும், பிறர்நலம் பேணும் பேருதவியாள னகவும் ஆகிவிடமாட்டான். கடவுளை நம்பு பவர்கள் எல்லாம், பகுத்தறிவற்றவர்களாகவும், பிற்போக்குவாதிகளாகவும், சீர்திருத்த எதிர்ப் பாளராகவும், ஒழுக்கமற்றவர்களாகவும், சுய நலம் பேணும் கொடியவர்களாகவும் ஆகிவிட மாட்டார்கள்.

உலகில் தோன்றிக் கடவுள் நெறியைப் பரப்பிய சமயச் சான்ருேர்கள் அனைவரும், பழுத்த நல்ல பகுத்தறிவாளர்களாகவும், முழுக்க முழுக்க முற்போக்கு நெறியாளர்களாக வும், சிறந்த தூய சீர்திருத்தக்காரர்களாகவும், உயரிய ஒழுக்க சீலர்களாகவும், பிறர்நலம் பேணும் பெருந்தகையாளர்களாகவும், விளங்கி வந்துள்ளனர். இயேசுநாதர் புத்தர்பெருமான் முகம்மதுநபிகள் போன்ற பண்டைப்பெருஞ் சான்ருேர்களும், இராமகிருஷ்ணர் விவேகா னந்தர் இராமலிங்கர் காந்தியடிகள் போன்ற இஞ்ஞான்றைச் சான்ருேர்களும், கடவுளுணர் வில் தலைசிறந்தோங்கிக், கடவுள் நெறியைப் பரப்பி, உலகமக்களுக்கெல்லாம் பலப்பல பெரு நலங்களைப் புரிந்துள்ளனர்.

சர் சார்லஸ் எலியட் என்னும் பேரறிஞர் ''யாராவது கடவுள் இல்லை என்று என்னிடம் கூறினல், இறந்தொழியக்கூடிய, பரமாணுவி னும் மிகச்சிறிய, ஓர் அற்ப மனிதன், இவ்வுல கின் ஓர் அணுத்துணைப் பரப்பில், ஒரு நொடி நேர அளவு மட்டுமே வாழ்ந்து கொண்டு, அழகும் வியப்பும் ஒழுங்கமைப்பும் நிறைந்து, எல்லை யின்றி விரிந்து விளங்கும் பேரண்டத் தொகுதி களையெல்லாம் நன்கினிது கண்டுணர்ந்து வைத் துங்கூட, மெய்ப்பிக்கப்பட முடியாத இந்த ஒரு கருத்தை, இத்துணை உறுதியாகக் கொள்ளுதல் எவ்வாறு இயலும்? என்றுதான், நான் வினவு கிற்பேன்'' என்று குறிப்பிடுகின்ருர்.

''கடவுள்இல்லை'' என்ருெருவன் கட்டுரைப்பின்
''சிற்றுணர்வை; கணமே வாழ்வை;
படர்உலகில் அணுஅனையை; பரந்த அண்டப்
பரப்பமைப்பும், அழகும், பண்பும்,
உடனுய இயங்குமுறை ஒழுங்கனைத்தும்
கண்களிற்கண் டுணர்ந்து வைத்தும்,
திடனய்நீ, பொருத்தமில்இத் தெளிவில்உரை
செப்பல்எங்ஙன்?'' என்றே கேட்பேன்!*

ஆதலின் நாம் அனைவரும், 'எந்நிலையில் நின்ருலும் எக்கோலம் கொண்டாலும்' கடவுள் ஒருவர் உண்டு என்று உணர்ந்து கடைப்பிடித்து வையத்து வாழ்வாங்கு நலமுற வாழ்ந்து மகிழ்ந்து, உய்திபெற முயலுவோமாக!

*தமிழாக்கம் ; **ந. ரா. முருகவேள்.**

**"If you say 'There is no God', I can only ask you, how a speck of mortal, living for a moment, on an atom of an earth, in plain sight of an infinite universe, full of beauty, wonder and design, can confidently hold so improbable a view?"**

**—SIR CHARLES ELIOT.**

